உ

முருகன் துணை

குருபாததாசர் அவர்களால் செய்தருளிய

## திருப்புல்வயல்

# குமரேச சதகம்



பிரசுரித்தவர்கள் :

B. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ்,

26, வெங்கட்ராமய்யர் தெரு,

சென்னை - 79.

உ

முருகன் துணை

குருபாததாசர் அவர்களால் செய்தருளிய

# திருப்புல்வயல்

# குமரேச சதகம்



பதிப்பாளர் :

B. இரத்தின நாயகர் அன்ட் சன்ஸ்

சென்னை - 1.

இதன் விலை ——

முருகன் துணை

# * குமரேச சதகம்

## காப்பு - வெண்பா

பூமேவு புல்லைப் பொருந்துகும ரேசர்மேல்
தேமே வியசதகஞ் செப்பவே—கோமேவிக்
காக்குஞ் சரவணத்தான் கம்பகும்பத் தைந்துகரக்
காக்குஞ் சரவணத்தான் காப்பு.

## † அவையடக்கம்

மாரிக்கு நிகரென்று பனிசொரிதல் போலவும்
மணைக்குநிக ரென்று சிறுபெண்
மணல்வீடு கட்டுவது போலவுஞ் சந்திரன்முன்
மருவு மின்மினி போலவும்
பாருக்கு ணல்லோர்மு னேபித்தர் பலமொழி
பகர்ந்திடுஞ் செயல் போலவும்
பச்சைமயி லாடுதற் கிணையென்று வான்கோழி
பாரிலா டுதல் போலவும்
பூரிக்கு மினியகா வேரிக்கு நிகரென்று
போதுவாய்க் கால் போலவும்
புகல்சிப்பி முத்துக்கு நிகராப் பளிங்கைப்
பொருந்த வைத்தது போலவும்
வாரிக்கு முன்வாவி பெருகல்போ லவுமின்சொல்
வாணர்மு னுகந்து புல்லை
வாலகும ரேசர்மேற் சதகம் புகன்றனன்
மனம்பொறுத் தருள் புரிகவே.

---

* குமரேச சதகம் - குமரேசர் என்கிற முருகக்கடவுளினுடைய பெயரை அமைத்துப் பாடப்பெற்ற நூறு செய்யுட்களைக்கொண்டதொரு பிரபந்தம்.

† அவையடக்கம் - அவையினிடத்து அதாவது கற்றறிந்தார் கூடியுள்ள சபையினிடத்து ஒன்றைப் பேசவோ அல்லது பாடவோ வந்த புலவன் ஆரம்பத்தில் தன்னைக் கீழ்ப்படுத்திப் பேசுதல்.

# நூல்

## குமரேசர் பெருமை

பூமிக்கோ ராறுதலை யாய்வந்து சரவணப்
பொய்கைதனில் விளையா டியும்
புனிதற்கு மந்த்ரவுப தேசமொழி சொல்லியும்
போதனைச் சிறையில் வைத்தும்
தேமிக்க அரிகரப் பிரமாதி கட்குஞ்
செருக்க முடியா வசுரனைத்
தேகங் கிழித்துவடி வேலினு லிருகூறு
செய்தமரர் சிறைத விர்த்தும்
நேமிக்கு ளன்பரிட ருற்றசம யந்தனி
னினைக்கமுன் வந்துத வியும்
நிதமுமெய்த் துணையாய் விளங்கலா லுலகிலுனை
நிகரான தெய்வ முண்டோ
மாமிக்க தேன்பருகு பூங்கடம் பணியுமணி
மார்பனே வள்ளி கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 1

## * அந்தணரியல்பு

குறையாத காயத்ரி யாதிசெப மகிமையுங்
கூறுசுரு திப்பெ ருமையுங்
கோதிலா ஆகமபு ராணத்தின் வளமையுங்
குலவுயா காதி பலவும்
முறையா நடத்தலாற் சகலதீ வினைகளையு
முளரிபோ லேத கிப்பார்

* அந்தணர் - பிராமணர்; அழகிய தன்மை புடையவர்.

முதன்மைபெறு சிலைசெம்பு பிருதுவிக ளிற்றெய்வ
மூர்த்தமுண் டாக்கு விப்பார்
நிறையாக நீதிநெறி வழுவார்க ளாகையால்
நீள்மழை பொழிந்து டுவதும்
நிலமது செழிப்பது மரசர்செங் கோல்புரியு
நிலையுமா தவர்செய் தவமும்
மறையோர்க ளாலே விளங்குமிவ் வுலகத்தின்
மானிடத் தெய்வ மிவர்காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 2

அரசரியல்பு

குடிபடையி லபிமான மந்திரா லோசனை
குறிப்பறிதல் சத்ய வசனங்
கொடை நித்ய மவரவர்க் கேற்றமரி யாதைபொறை
கோடாத சதுருபாயம்
படிவிசா ரணையொடு ப்ரதானிதள கர்த்தரைப்
பண்பறிந் தேய மைத்தல்
பல்லுயி ரெலாந்தன் னுயிர்க்குநிக ரென்றே
பரித்தல்குற் றங்கள் களைதல்
துடிபெறு தமக்குறுதி யானநட் பகமின்மை
சுகுணமொடு கல்வி யறிவு
தோலாத காலமிட மறிதல்வினை வலிகண்டு
துஷ்டநிக் ரக சௌரியம்
வடிவுபெறு செங்கோல் நடத்திவரு மரசர்க்கு
வழுவாத முறைமை யிவைகாண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 3

## வணிகரியல்பு

கொண்டபடி போலும்விலை பேசிலா பஞ்சிறிது
கூடிவர நயமு ரைப்பார்
கொள்ளுமொரு முதலுக்கு மோசம்வராதபடி
குறுகவே செலவு செய்வார்
வண்டப் புரட்டர்தா முறிதந்து பொன்னடகு
வைக்கினுங் கடன்ஈந் திடார்
மருவுநா ணயமுளோர் கேட்டனுப்பு கினுமவர்
வார்த்தையி லெலாங் கொடுப்பார்
கண்டெழுது பற்றுவர வினின்மயிர் பிளந்தே
கணக்கிலணு வாகிலும் விடார்
காசுவீ ணிற்செலவி டாருசித மானதிற்
கனதிரவி யங்கள் விடுவார்
மண்டலத் தூடுகன வர்த்தகஞ் செய்கின்ற
வணிகர்க்கு முறைமை யிவைகாண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 4

## வேளாளரியல்பு

நல்லதே வாலயம் பூசனை நடப்பதும்
நாடொறு மழைபொ ழிவதும்
நாடிய தபோதனர்கள் மாதவம் புரிவதும்
நவில்வேத வேதிய ரெலாஞ்
சொல்லரிய யாகாதி கருமங்கள் செய்வதுந்
தொல்புவி செழிக்கு நலமுஞ்
சுபசோப னங்களுங் கொற்றவர்கள் செங்கோல்
துலங்குமனு நெறிமுறை மையும்
வெல்லரிய சுகிர்தமொடு வர்த்தகன் கொள்விலையும்
விற்பனையு மதிக புகழும்

மிக்கஅதி காரமுந் தொழிலாளர் சீவனமும்
வீரரண சூரவலியும்
வல்லமைகள் சகலமும் வேளாளர் மேழியின்
வாழ்வினுல் விளைவ தன்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 5

## பிதாக்கள்

தவமதுசெய் தேபெற் றெடுத்தவன் முதற்பிதா
தனைவளர்த் தவனெரு பிதா
தயையாக வித்தையைச் சாற்றினவ னெருபிதா
சார்ந்த சற்குருவொரு பிதா
அவமறுத் தாள்கின்ற அரசரொரு பிதா நல்ல
ஆபத்து வேளை தன்னில்
அஞ்சலென் றுற்றதுயர் தீர்த்துளோ னெருபிதா
அன்புளமு ளோனெரு பிதா
கவளமிடு மனைவியைப் பெற்றுளோ னெருபிதா
கலிதவிர்த் தவனெரு பிதா
காசினியி லிவரை நித்தம்பிதா வென்றுளங்
கருதுவது நீதி யாகும்
மவுலிதனில் மதியரவு புனைவிமல ருதவுசிறு
மதலையென வருகுரு பரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 6

## ஒன்றை யொன்று பற்றி இருப்பன

சத்தியந் தவரு திருப்பவ ரிடத்தினிற்
சார்ந்துதிரு மாதிருக் குஞ்
சந்ததந் திருமா திருக்கும் இடத்தினிற்
றனதுபாக் கியமிருக்கும்

மெய்த்துவரு பாக்கிய மிருக்கும் இடந்தனில்
விண்டுவின் களையிருக் கும்
விண்டுவின் களைபூண் டிருக்கும் இடந்தனில்
மிக்கான தயையிருக் கும்
பத்தியுட னினியதயை யுள்ளவ ரிடந்தனிற்
பகர்தரும மிகவிருக்கும்
பகர்தரும முள்ளவ ரிடந்தன்னிற் சத்துரு
பலாயனத் திறலிருக்கும்
வைத்திசை மிகுந்ததிற னுள்ளவ ரிடத்தில்வெகு
மன்னுயிர் சிறக்கு மன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே.

## இவர்க்கிவர் தெய்வமெனல்

ஆதுலர்க் கன்னம் கொடுத்தவர்க ளேதெய்வம்
அன்பான மாணக் கருக்
கரியகுரு வேதெய்வம் அஞ்சினோர்க் காபத்
தகற்றினோ னேதெய்வ மாம்
காதலுறு கற்புடைய மங்கையர் தமக்கெலாங்
கணவனே மிக்க தெய்வங்
காசினியின் மன்னுயிர் தமக்கெலாங் குடிமரபு
காக்குமன் னவர்தெய்வ மாம்
ஓதரிய பிள்ளைகட் கன்னைதந் தையர்தெய்வம்
உயர்சாதி மாந்தர் யார்க்கும்
உறவின்முறை யார்தெய்வம் விசுவாச முள்ள
குற்றசிவ பத்தர் தெய்வம் [பேர்க்
மாதயையி னற்சூத்திரர்க்கு மறையோர் தெய்வம்
வானவர்க் குத்தெய்வம் நீ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 8

## இவர்க்கிதில் நினைவெனல்

ஞானநெறி யாளர்க்கு மோக்ஷத்தி லேநினைவு
நல்லறிவு ளோர் தமக்கு
நாடொறுந் தருமத்தி லேநினைவு மன்னர்க்கு
ராச்சியந் தன்னில் நினைவு
ஆனகா முகருக்கு மாதர்மே லேநினைவு
அஞ்சாத திருடருக் கிங்
கனுதினங் களவிலே நினைவுதன வணிகருக்
காதாய மீது நினைவு
தானமிகு குடியாள ருக்கெலாம் வேளாண்மை
தனில்நினைவு கற்ப வர்க்குத்
தகுகல்வி மேல்நினைவு வேசியர்க் கினியபொருள்
தருவோர்கள் மீது நினைவு
மானபர னுக்குமரி யாதைமேல் நினைவெற்கு
மாருதுன் மீது நினைவு
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 9

## இவர்க்கிது இல்லையெனல்

வேசைக்கு நிசமில்லை திருடனுக் குறவில்லை
வேந்தர்க்கு நன்றி யில்லை
மிடியற்கு விலைமாதர் மீதுவங் கணமில்லை
மிலேச்சற்கு நிறைய தில்லை
ஆசைக்கு வெட்கமில்லை ஞானியா னவனுக்குள்
அகமில்லை மூர்க்கன் றனக்
கன்பில்லை காமிக்கு முறையில்லை குணமிலோற்
கழகில்லை சித்த சுத்தன்
பூசைக்கு நவிலிங்க சுத்தியில்லை யாமுணர்
புலவனுக் கயலோ ரிலை

புல்லனுக் கென்றுமுசி தானுசித மில்லைவரு
புலையற் கிரக்க மில்லை
மாசைத் தவிர்ந்தமதி முகதெய்வ யானையொடு
வள்ளிக் கிசைந்த அழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 10

## இப்படிப்பட்டவர் இவரெனல்

நியாயநெறி தவறும லுலகபரி பாலனை
நடத்துமவ னேயரச னும்
ராசயோ சனைதெரிந் துறுதியா கியசெய்தி
நவிலு மவனே மந்த்ரி
நேயமுட னேதன் சரீரத்தை யெண்ணாத
நிர்வாகி யேசூர னும்
நிலைபெறும் இலக்கணம் இலக்கியம் அறிந்துசொலு
நிபுணகவி யேகவிஞ னும்
ஆயதொரு வாகடந் தாதுவின் நிதானமும்
அறியுமுதி யோன் வைத்தியன்
அகமன்றி மெய்யுணர்ந் தைம்புல னொழித்துவிட்
டவனே மெய்ஞ்ஞானி யெனலாம்
மாயவர் சகோதரி மனோன்மணிக் கன்பான
வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 11

## விரைந்நடக்கத் தகுவன இவையெனல்

அக்கினியை வாய்முந்து துர்ச்சனரை வஞ்சமனை
யாளைவளர் பயிர்கொள் களையை
அஞ்சா விரோதிகளை அநியாய முடையோரை
அகத்தியப் பெண்க ளார்ப்பைக்

கைக்கினிய தொழிலாளியைக்கொண்ட அடிமையை
களவுசெய் யுந்திரு டரைக் [க்
கருதிய விசாரத்தை அடக்கமில் பலிசையைக்
கடிதான கோபந் தணி
மெய்க்கினித லாப்பிணியை அவையுதா சீனத்தை
விணைமூண் டிடுஞ் சண்டையை
விஷமேறி கோரத்தை யன்றடக் குவதலான்
மிஞ்சவிட லாகாது காண்
மைக்கினிய கன்னிகுற வள்ளிதெய் வானையை
மணஞ்செய்த பேரழக னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 12

இவர்க்கிது துரும்பெனல்

தாராளமாகக் கொடுக்குந் தியாகிகள்
தமக்குநற் பொருள் துரும்பு
தன்னுயிரை யெண்ணுத சூரனுக் கெதிராளி
தளமெலா மொரு துரும்பு
பேரான பெரியருக் கற்பரது கையினிற்
பிரயோ சனந் துரும்பு
பெரிதான மோக்ஷ சிந்தனையுள் ளவர்க்கெலாம்
பெண்போக மொரு துரும்பு
தீராத சகலமும் வெறுத்ததுற விக்குவிறல்
சேர்வேந்த னொரு துரும்பு
செய்யகலை நாமகள் கடாக்ஷமுள் ளோர்க்கெலாஞ்
செந்தமிழ்க் கவி துரும்பாம்
வாராரு மணிகொள்தன வள்ளிதெய்வானையை
மணம்புணரும்வடி வேலவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 13

## இதனை விளக்குவது இதுவெனல்

பகல்விளக் குவதிரவி நிசிவிளக் குவதுமதி
பார்விளக் குவது மேகம்
மதிவிளக் குவதுபெண் குடிவிளக் குவதரசு
பரிவிளக் குவது வே
இகல்விளக் குவதுவலி நிறைவிளக் குவதுநலம்
இசைவிளக் குவது சுதியூர்
இடம்விளக் குவதுகுடி யுடல்விலக்குவ துண்டி
இனியசொல் விளக்குவ தருள்
புகல்விளக் குவதுகொடை தவம்விளக்குவ தறிவு
பூவிளக் குவது வாசம்
பொருள்விளக் குவதுதிரு முகம்விளக்கு வதுநகை
புத்தியை விளக்குவது நூல்
மகம்விளக் குவதுமறை சொல்விளக்குவதுநிசம்
வாவியை விளக்குவது நீர்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 14

## பிறப்பிட நன்மையால் நன்மை பெருமை

சிங்கார வனமதி லுதிப்பினுங் காகமது
தீஞ்சொல்புகல் குயிலாகு மேயு
திரையெறியும் வாவியிற் பூத்தாலு மேகொட்டி
செங்கஞ்ச மலராகு மோ
அங்கான கத்திற் பிறந்தாலு முயலான
தானையின் கன்றாகு மோ
ஆண்மையா கியநல்ல குடியிற் பிறந்தாலு
மசடர்பெரி யோராவ ரோ
சங்காடு பாற்கடல் பிறந்தாலு நத்தைதான்
சாலக்கி ராம மாமோ

தடமேவு கடல்நீரி லேயுப்பு விளையினுஞ்
சாரசர்க் கரையாகு மோ
மங்காத செந்தமிழ்க் குறுமுனிக் குபதேசம்
வைத்தமெய்ஞ் ஞான குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 15

## பலர்க்கும் பயன்படுவன

கொண்டல்பொழி மாரியும் உதாரசற் குணமுடைய
கோவும்ஊ ருணியின் நீரும்
கூட்டமிடும் அம்பலத் துறுதருவின் நீழலுங்
குடியாளர் விவசாயமும்
கண்டவர்க ளெல்லாரும் வரும்பெருஞ் சந்தியிற்
கனிபல பழுத்த மரமுங்
கருணையுட னேவைத் திடுந்தணீர்ப் பந்தலும்
காவேரி போலூற் றமும்
விண்டலத் துறைசந்தி ராதித்த கிரணமும்
வீசுமா ருத சீதமும்
விவேகியெனு நல்லோரிடத்தி லுறுசெல்வமும்
வெகுசனர்க் குபகார மாம்
வண்டிமிர் கடப்பமலர் மாலையணி செங்களப
மார்பனே வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 16

## தாம் அழியினும் தங்குணம் அழியாதவை

தங்கமா னதுதழலில் நின்றுருகி மருகினுந்
தன்னொளி மழுங்கி டாது
சந்தனக் குறடுதான் மெலிந்துதேய்ந் தாலுமே
தன்மணங் குன்றி டாது

பொங்கமிகு சங்குசெந் தழலில்வெந் தாலுமே
பொலிவெண்மை குறைவு றுது
போதவே காய்ந்துநன் பால்குறுகி னுலும்
பொருந்துசுவை போய்விடாது
துங்கமணி சாணையிற் றேய்ந்துவிட் டாலுந்
துலங்குகுண மொழியாது பின்
றென்மைதரு பெரியோர் மடிந்தாலும் அவர்களது
தூயநிறை தவறுகு மோ
மங்களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரியை
மருவுதிண் புயவாச னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 17

## நரகில் வீழ்வோர்

மன்னரைச் சமரில்விட் டோடினவர் குருமொழி
மறந்தவர் கொலைப்பாதகர்
மாதா பிதாவைநிந் தித்தவர்கள் பரதார
மருவித் திரிந்த பேர்கள்
அன்னங் கொடுத்தபே ருக்கழிவை யெண்ணினோர்
அரச டக்கிய அமைச்சர்
ஆலய மிகழ்ந்தவர்கள் விசுவாச காதகர்
அருந்தவர் தமைப்பழித் தோர்
முன்னுதவி யாய்ச்செய்த நன்றியை மறந்தவர்
முகஸ்துதி வழக் குரைப்போர்
முற்றுசிவ பத்தரை நடுங்கச் சினந்தவர்கள்
முழுதும்பொ யுரைசொல்லு வோர்
மன்னொருவர் வைத்தபொரு ளபகரித்தோ ரிவர்கள்
மா நரகில் வீழ்வ ரன்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 18

## சரீர சுகம்

மாதத் திரண்டுவிசை மாதரைப் புல்குவது
மறுவறுவி ரோசனந் தான்
வருஷத் திரண்டுவிசை தைலந் தலைக்கிடுதல்
வாரத் திரண்டு விசையாம்
மூதறிவி னெடுதனது வயதினுக் கிளையவொரு
மொய்குழ லுடன்சை யோகம்
முற்றிதயிர் காய்ச்சல்பால் நீர்மோ ருருக்குநெய்
முதிரா வழுக்கை யிளநீர்
சாதத்தி லெவ்வள வானாலும் புசித்தபின்
தாகந் தனக்கு வாங்கல்
தயையாக வுண்டபி னுலாவல்இதை மேலவர்
சரீரசுக மாமென்பர் காண்
மாதவகு மாரிசா ரங்கத் துதித்தகுற
வள்ளிக் கந்த சரசா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 19

## யார்க்கும் அனுபோகம் விடாமை

தேசுபெறு மேருப்ர தக்ஷணஞ் செய்துமதி
தேகவடு நீங்க வில்லை
திருமால் உறங்கிடுஞ் சேடனுக் குவணன்
செறும்பகை ஒழிந்த தில்லை
ஈசன் கழுத்திலுறு பாம்பினுக் கிரைவே
றிலாமலே வாயு ஆகும்
இனியகண் ஆகிவரு பரிதியா னவனுக்
கிராகுவே கனவி ரோதி
ஆசிலாப் பெரியோர் இடத்தினில் அடுக்கினும்
அமைத்தபடி அன்றி வருமோ

அவரவர்கள் அனுபோகம் அனுபவித் திடல்வேண்
அல்லால் வெறுப்ப தெவரை [டும்
வாசவனும் உம்பரணை வரும்விசய சயவென்று
வந்து தொழுதேத்து சரணு
மயிலேறி விளையாடி குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 20

## இதுவின்றி இது சிறவாதெனல்

குருவிலா வித்தைகூர் அறிவிலா வாணிபங்
குணமிலா மனைவி ஆசை
குடிநலம் இலாநாடு நீதியில் லாஅரசு
குஞ்சரமி லாத வெம்போர்
திருவிலா மெய்த்திறமை பொறையிலா மாதவ
தியான மில் லாத நிஷ்டை
தீபமில் லாதமனை சோதரமி லாதவுடல்
சேகரம் இலாத சென்னி
உருவிலா மெய்வளமை பசியிலா உண்டிபுகல்
உண்மையில் லாத வசனம்
யோசனையி லாமந்த்ரி தைரியம் இலாவீரம்
உதவியில் லாத நட்பு
மருவிலா வண்ணமலர் பெரியோர் இலாதசபை
வையத் திருந்தென் பயன்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 21

## பகைக்கப்படாதவர் இவரெனல்

அரசர்பகையுந் தவம்புரி தபோதனர் பகையும்
அரியகரு ணீகர் பகையும்
அடுத்துக் கெடுப்போர் கொடும்பகையும் உட்பகை
அருளிலாக் கொலைஞர் பகையும் [யும்

விரகுமிகும் ஊரிலுள் ளோருடன் பகையுமிகு
விகடப்ர சங்கி பகையும்
வெகுசனப் பகையுமந் திரவாதி யின்பகையும்
விழைமருத் துவர்கள் பகையும்
உரமருவு கவிவாணர் பகையும் ஆசான்பகையும்
உறவின்முறை யார்கள் பகையும்
உற்றதிர வியமுளோர் பகையுமந் திரிபகையும்
ஒருசிறிதும் ஆகாது காண்
வரநதியின் மதலையென இனியசர வணமிசையில்
வருதருண சிறு குழவியே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 22

## பேயெனப்படுவோர் இவரெனல்

கடனுதவு பேர்வந்து கேட்கும்வே ளையில்முகங்
கடுகடுக் கின்ற பேயும்
கனகமருவு பெரியதனம் வந்தவுடன் இறுமாந்து
கண்விழிக் காத பேயும்
அடைவுடன் சத்துருவின் பேச்சைவிசு வாசித்
தகப்பட் டுழன்ற பேயும்
ஆசைமனை யாளுக்கு நேசமாய் உண்மைமொழி
ஆனதை உரைத்த பேயும்
இடரிலா நல்லோர்கள் பெரியோர்களைச் சற்றும்
எண்ணு துரைத்த பேயும்
இனியபரி தானத்தில் ஆசைகொண் டொருவற்
கிடுக்கண்செய் திட்ட பேயும்
மடமனை இருக்கப் பரத்தையைப் புணர்பேயும்
வசைபெற்ற பேய்கள் அன்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 23

பொங்கமிகு சங்குசெந் தழலில்வெந் தாலுமே
பொலிவெண்மை குறைவுறுது
போதவே காய்ந்துநன் பால்குறுகி னாலும்
பொருந்துசுவை போய்விடாது
துங்கமணி சாணையிற் றேய்ந்துவிட் டாலுந்
துலங்குகுண மொழியாது பின்
றுன்மைதரு பெரியோர் மடிந்தாலும் அவர்களது
தூயநிறை தவறுகு மோ
மங்களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரியை
மருவுதிண் புயவாச னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 17

## நரகில் வீழ்வோர்

மன்னரைச் சமரில்விட் டோடினவர் குருமொழி
மறந்தவர் கொலைப்பாதகர்
மாதா பிதாவைநிந் தித்தவர்கள் பரதார
மருவித் திரிந்த பேர்கள்
அன்னங் கொடுத்தபே ருக்கழிவை யெண்ணினோர்
அரச டக்கிய அமைச்சர்
ஆலய மிகழ்ந்தவர்கள் விசுவாச காதகர்
அருந்தவர் தமைப்பழித் தோர்
முன்னுதவி யாய்ச்செய்த நன்றியை மறந்தவர்
முகஸ்துதி வழக் குரைப்போர்
முற்றுசிவ பத்தரை நடுங்கச் சினந்தவர்கள்
முழுதும்பொ யுரைசொல்லு வோர்
மன்னொருவர் வைத்தபொரு ளபகரித்தோ ரிவர்கள்
மா நரகில் வீழ்வ ரன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 18

### சரீர சுகம்

மாதத் திரண்டுவிசை மாதரைப் புல்குவது
மறுவறுவி ரோசனந் தான்
வருஷத் திரண்டுவிசை தைலந் தலைக்கிடுதல்
வாரத் திரண்டு விசையாம்
மூதறிவி னுடுதனது வயதினுக் கிளையவொரு
மொய்குழ லுடன்சை யோகம்
முற்றிதயிர் காய்ச்சல்பால் நீர்மோ ருருக்குநெய்
முதிரா வழுக்கை யிளநீர்
சாதத்தி லெவ்வள வானலும் புசித்தபின்
தாகந் தனக்கு வாங்கல்
தயையாக வுண்டபி னுலாவல்இதை மேலவர்
சரீரசுக மாமென்பர் காண்
மாதவகு மாரிசா ரங்கத் துதித்தகுற
வள்ளிக் கந்த சரசா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 19

### யார்க்கும் அனுபோகம் விடாமை

தேசுபெறு மேருப்ர தக்ஷணஞ் செய்துமதி
தேகவடு நீங்க வில்லை
திருமால் உறங்கிடுஞ் சேடனுக் குவணன்
செறும்பகை ஒழிந்த தில்லை
ஈசன் கழுத்திலுறு பாம்பினுக் கிரைவே
றிலாமலே வாயு ஆகும்
இனியகண் ஆகிவரு பரிதியா னவனுக்
கிராகுவே கனவி ரோதி
ஆசிலாப் பெரியோர் இடத்தினில் அடுக்கினும்
அமைந்தபடி அன்றி வருமோ

அவரவர்கள் அனுபோகம் அனுபவித் திடல்வேண்
அல்லால் வெறுப்ப தெவரை [டும்
வாசவனும் உம்பரணை வரும்விசய சயவென்று
வந்து தொழுதேத்து சரணு
மயிலேறி விளையாடி குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 20

## இதுவின்றி இது சிறவாதெனல்

குருவிலா வித்தைகூர் அறிவிலா வாணிபங்
குணமிலா மனைவி ஆசை
குடிநலம் இலாநாடு நீதியில் லாஅரசு
குஞ்சரமி லாத வெம்போர்
திருவிலா மெய்திறமை பொறையிலா மாதவ
தியான மில் லாத நிஷ்டை
தீபமில் லாதமனை சோதரமி லாதவுடல்
சேகரம் இலாத சென்னி
உருவிலா மெய்வளமை பசியிலா உண்டிபுகல்
உண்மையில் லாத வசனம்
யோசனையி லாமந்த்ரி தைரியம் இலாவீரம்
உதவியில் லாத நட்பு
மருவிலா வண்ணமலர் பெரியோர் இலாதசபை
வையத் திருந்தென் பயன்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 21

## பகைக்கப்படாதவர் இவரெனல்

அரசர்பகையுந் தவம்புரி தபோதனர் பகையும்
அரியகரு ணீகர் பகையும்
அடுத்துக் கெடுப்போர் கொடும்பகையும் உட்பகை
அருளிலாக் கொலைஞர் பகையும் [யும்

விரகுமிகும் ஊரிலுள் ளோருடன் பகையுமிகு
விகடப்ர சங்கி பகையும்
வெகுசனப் பகையுமந் திரவாதி யின்பகையும்
விழைமருத் துவர்கள் பகையும்
உரமருவு கவிவாணர் பகையும் ஆசான்பகையும்
உறவின்முறை யார்கள் பகையும்
உற்றதிர வியமுளோர் பகையுமந் திரிபகையும்
ஒருசிறிதும் ஆகாது காண்
வரநதியின் மதலையென இனியசர வண்மிசையில்
வருதருண சிறு குழவியே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 22

## பேயெனப்படுவோர் இவரெனல்

கடனுதவு பேர்வந்து கேட்கும்வே ளையில்முகங்
கடுகடுக் கின்ற பேயும்
கனகமருவு பெரியதனம் வந்தவுடன் இறுமாந்து
கண்விழிக் காத பேயும்
அடைவுடன் சத்துருவின் பேச்சைவிசு வாசித்
தகப்பட் டுழன்ற பேயும்
ஆசைமனை யாளுக்கு நேசமாய் உண்மைமொழி
ஆனதை உரைத்த பேயும்
இடரிலா நல்லோர்கள் பெரியோர்களைச் சற்றும்
எண்ணு துரைத்த பேயும்
இனியபரி தானத்தில் ஆசைகொண் டொருவற்
கிடுக்கண்செய் திட்ட பேயும்
மடமனை இருக்கப் பரத்தையைப் புணர்பேயும்
வசைபெற்ற பேய்கள் அன்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 23

## அவ்வவ் வினத்தில் உயர்ந்தவை

தாருவில் சந்தனம் நதியினில் கங்கைவிர
தத்தினில் சோம வாரம்
தகைபெறு நிலத்தினில் காஸ்மீர கண்டந்
தலத்தில் சிதம்பரத் தலம்
சீருலவு ரிஷிகளில் வசிஷ்டர்பசு விற்காம
தேனுமுனி வரில்நா ரதன்
செல்வநவ மணிகளில் திகழ்பதும ராகமணி
தேமலரில் அம்போ ருகம்
பேருலவு கற்பினில் அருந்ததி கதித்திடு
பெலத்தின்மா ருதம்யா னையில்
பேசில்ஐ ராவதம் தமிழினில் அகத்தியம்
பிரணவம் மந்திரத் தில்
வாரிதியி லேதிருப் பாற்கடல் குவட்டினில்
மகாமேரு ஆகும் அன்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 24

## அவரவர்க்குப் பெலமானவை

அந்தணர்க் குயர்வேத மேபெலம் கொற்றவர்க்
கரியசௌரி யமே பெலம்
ஆனவணி கர்க்குநிதி யேபெலம் சூத்திரர்க்
காயின் ஏர்உழவே பெலம்
மந்திரிக் குச்சதுர் உபாயமே பெலம்நீதி
மானுக்கு நடுவே பெலம்
மாதவர்க் குத்தவசு பெலம்மட வியர்க்குநிறை
மானமிகு கற்பே பெலம்
தந்திர மிகுத்தகன சேவகர் தமக்கெலாஞ்
சாமிகா ரியமே பெலம்

சான்றவர்க் குப்பொறுமையே பெலம் புலவோர்
தமக்குநிறை கல்வி பெலமாம்
வந்தனை செயும்பூசை செய்பவர்க் கன்புபெலம்
வாலவடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 25

## இருந்தும் பயன்படாதவை

தருணத்தில் உதவிசெய் யாதநட் பாளர்பின்
தந்தென தராமல் என்ன
தராதரம் அறிந்துமுறை செய்யாத மன்னரைச்
சார்ந்தென்ன நீங்கில் என்ன
பெருமையுடன் ஆண்மையில் லாதஒரு பிள்ளையைப்
பெற்றென்ன பெறுமல் என்ன
பிரியமாய் உள்ளன்பி லாதவர்கள் நேசம்
பிடித்தென்ன விடுக்கில் என்ன
தெருளாக மானமில் லாததொரு சீவனஞ்
செய்தென செயாமல் என்ன
தேகிஎன வருபவர்க் கீயாத செல்வஞ்
சிறந்தென முறிந்தும் என்ன
மருவிளமை தன்னிலில் லாதகன் னிகைபின்பு
வந்தென வராமல் என்ன
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 26

## உபகாரம் இல்லாதவை

கடல்நீர் மிகுந்தென்ன ஓதிதான் பெருத்தென்ன
காட்டிலவு மலரின் என்ன
கருவேல் பழுத்தென்ன நாய்ப்பால் சுரந்தென்ன
கானில்மழை பெய்தும் என்ன

அடர்கழுதை லத்திநிலம் எல்லாங் குவிந்தென்ன
அரியகுணம் இல்லாத பெண்
அழகா யிருந்தென்ன ஆஸ்தான கோழைபல
அரியநூல் ஓதி யென்ன
திடமினிய பூதம்வெகு பொன்காத் திருந்தென்ன
திறன்மிகுங் கரடி மயிர்தான்
செறிவாகி நீண்டென்ன வஸ்த்ரபூ ஷணமெலாஞ்
சித்திரத் துற்றும் என்ன
மடமிகுந் தெவருக்கும் உபகாரம் இல்லாத
வம்பர்வாழ் வுக்கு நிகராம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 27

## பதரெனப்படுவோர்

தன்பெருமை சொல்லியே தன்னைப் புகழ்ந்தபதர்
சமர்கண் டொளிக்கும் பதர்
தக்கபெரி யோர்புத்தி கேளா பதர்தோழர்
தம்மொடு சலிக்கும் பதர்
பின்புகா ணுவிடந் தன்னிலே புறணிபல்
பேசிக் களிக்கும் பதர்
பெற்றதாய் தந்தைதுயர் படவாழ்ந் திருந்தபத
பெண்புத்தி கேட்கும் பதர்
பொன்பணம் இருக்கவே போயிரக் கின்றபதர்
பொய்சாட்சி சொல்லும் பதர்
புவியோர் நடத்தையை இகழ்ந்தபதர் தன்மனைவி
புணர்தல் வெளியாக்கும் பதர்
மன்புணரும் வேசையுடன் விபசரிக் கின்றபதர்
மனிதரில் பதரென்பர் காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 28

## காணுவிடில் துயரப்படுபவை

இரவிகா ணுவனச மாரிகா ணுதபயிர்
இந்துகா ணுத குமுதம்
ஏந்தல்கா ணுநாடு கரைகள்கா ணுஓடம்
இன்சொல்கா ணுவி ருந்து
சுரபிகா ணுதகன் றன்னைகா ணுமதலை
சோலைகா ணுத வண்டு
தோழர்கா ணுநேயர் கலைகள்கா ணுதமான்
சோடுகா ணுத பேடு
குரவர்கா ணுதசபை தியாகிகா ணுவறிஞர்
கொழுநர்கா ணுத பெண்கள்
கொண்டல் காணுதமயில் சிறுவர்கா ணுதவாழ்வு
கோடைகா ணுத குயில்கள்
வரவுகா ணுதசெல விவையெலாம் புவிமீதில்
வாழ்வுகா ணுஇளமை யாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 29

## வியாதிக்கு மூலங்கள்

கல்லினுல் மயிரினுல் மீதூண் விரும்பலால்
கருதிய விகாரத் தினுல்
கடுவழி நடக்கையால் மலசலம் அடக்கையால்
கனிபழங் கறிஉண்ண லால்
நெல்லினுல் உமியினுல் உண்டபின் மூழ்கலால்
நித்திரைகள் இல்லா மையால்
நீர்ப்பகையி னுல்பனிக் காற்றிலுடல் நோதலால்
நீடுசரு கிலைஊற லால்
மெல்லிநல் லார்கலவி அதிகம்உள் விரும்பலால்
வீழ்மலஞ் சிக்குகையி னுல்

மிகுசுமை யெடுத்தலால் இளவெயில் காய்தலால்
மெய்வாட வேலை செயலால்
வல்இரவி லேதயிர்கள் சருகாதி உண்ணலால்
வன்பிணிக் கிடமென்பர் காண்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 30

செத்தும் சாகாதவர்

அனைவர்க்கும் உபகாரம் ஆம்வாவி கூவம்உண்
டாக்கினோர் நீதி மன்னர்
அழியாத தேவால யங்கட்டி வைத்துளோர்
அறங்கள் செய்த பெரியோர்
தனையொப்பி லாப்புதல்வனைப் பெற்றபேர் பொருது
சமர்வென்ற சுத்த வீரர்
தரணிதனில் நிலைநிற்க எந்நாளும் மாருத
தருமங்கள் செய்த பேர்கள்
கனவித்தை கொண்டவர்கள் ஓயாத கொடையாளர்
காவியஞ் செய்த கவிஞர்
கற்பினில் மிகுந்தஒரு பத்தினி மடந்தையைக்
கடிமணஞ் செய்தோர்கள் இம்
மனிதர்கள் சரீரங்கள் போகினுஞ் சாகாத
மனிதரிவர் ஆகும் அன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 31

சாகாதிருந்துஞ் செத்தவர்

மாறாத வறுமையோர் தீராத பிணியாளர்
வருவேட் டகத்தில் உண்போர்
மனைவியை வழங்கியே சீவனஞ் செய்குவோர்
மன்னுமொரு ராச சபையில்

தூருக நிந்தைசெய் துய்குவோர் சிவிகைகள்
சுமந்தே பிழைக்கின்ற பேர்
தொலையா விசாரத் தழுந்துவோர் வார்த்தையில்
சோர்வுபட லுற்ற பெரியோர்
வீருக மனையாள் தனக்கஞ்சி வந்திடு
விருந்தினை ஒழித்து விடுவோர்
வீம்புடன் செல்லாத விவகாரம் அதுகொண்டு
மிக்கசபை ஏறும் அசடர்
மாருக இவரெலாம் உயிருடன் செத்தசவம்
ஆகியொளி மாய்வர் கண்டாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 32

சிறிதும் பயன்படாதவை

பதராகி லுங்கன விபூதிவிளை விக்கும்
பழமைபெறு சுவராகி லும்
பலருக்கும் மறைவாகும் மாடுரிஞ் சிடுமலம்
பன்றிகட் குபயோக மாம்
கதமிகு கடாஎன்னில் உழுதுபுவி காக்கும்வன்
கழுதையும் பொதி சுமக்கும்
கல்லெனில் தேவர்களும் ஆலயமும் ஆம்பெருங்
கான்புற்றும் அரவ மனையாம்
இதமிலாச் சவமாகி லுஞ்சிலர்க் குதவிசெயும்
இழிவுறு குரங்கா யினும்
இரக்கப் பிடித்தவர்க் குதவிசெயும் வாருகோல்
ஏற்றமா ளிகை விளக்கும்
மதமது மிகும்பரம லோபரால் உபகாரம்
மற்றொருவ ருக்கு முண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 33

### உலுத்தர் இயல்பு

திரவியங் காக்குமொரு பூதங்கள் போல்பணந்
தேடிப் புதைத்து வைப்பார்
சீலைநல மாகவுங் கட்டார்கள் நல்லமுது
செய்துண்ணார் அறமுஞ் செயார்
புரவலர்செய் தண்டந் தனக்கும் வலுவாகப்
புகுந்திருட ருக்கும் ஈவார்
புலவரைக் கண்டவுடன் ஓடிப் பதுங்குவார்
புராணிகர்க் கொன்றும் உதவார்
விரகறிந் தேபிள்ளை சோறுகறி தினுமளவில்
வெகுபணஞ் செலவாக லால்
விளையாடு கிழவனும் பிள்ளையே பிள்ளையென
மிகுசெட்டி சொன்ன கதைபோல்
வரவுபார்க் கின்றதே அல்லாது லோபியர்கள்
மற்றொருவ ருக்கீவ ரோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 34

### திருவாழ் இடங்கள்

கடவா ரணத்திலுங் கங்கா சலத்திலும்
கமலாச னந்தன்னிலும்
காகுத்தன் மார்பிலும் கொற்றவர் இடத்திலும்
காலின் கூட்டத்தி லும்
நடமாடு பரியிலும் பொய்வார்த்தை சொல்லாத
நல்லோ ரிடந்தன்னி லும்
நல்லசுப லக்ஷண மிகுந்தமனை தன்னிலும்
ரணசுத்த வீரர்பா லும்
அடர்கே தனத்திலும் சுயம்வரந் தன்னிலும்
அருந்துளசி வில்வத்தி லும்

அலர்தரு கடப்பமலர் தனிலும்இர தத்திலும்
அதிககுண மான ரூப
மடவா ரிடத்திலும் குடிகொண்டு திருமாது
மாறு திருப்பள் அன்றே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 35

## மூதேவி வாழிடங்கள்

சோரமங் கையர்கள் நிசம்உரை யார்கள்வாயினில்
சூதகப் பெண்கள் நிழலில்
சூளையில் சூழ்தலுறு புகையில் களேபரம்
சுடுபுகையில் நீசர் நிழலில்
காரிரவில் அரசுநிழ லில்கடா நிழலினெடு
கருதிய விளக்கு நிழலில்
காமுகரில் நிஷ்டையில் லாதவர் முகத்தில்
கடுஞ்சினத் தோர் சபையினில்
ஈரமில் லாதகளர் நிலத்தினில் இராத்தயிரில்
இழியுமது பானர் பாலில்
இலைமேல் விளாநிழலில் நிதமழுக் கடைமணையில்
ஏனம்நாய் அசகரத் தூள்
வாரிய முறத்தூள் பெருக்குதூள் மூதேவி
மாறு திருப்பள் என்பார்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 36

## திருந்தினும் திருந்தாமை

கட்டிஎரு விட்டுச் செழுந்தேனை வார்க்கிலுங்
காஞ்சிரங் கைப்பு விடுமோ
கழுதையைக் கட்டிவைத் தோமம் வளர்க்கினுங்
கதிபெறுங் குதிரை ஆமோ

குட்டியர வுக்கமு தளித்தே வளர்க்கினும்
கொடுவிடம் அலாது தருமோ
குக்கல்நெடு வாலுக்கு மட்டையைக் கட்டிலுங்
கோணு மலே நிமிருமோ
கிட்டியே தாரகைக் கூட்டங்கள் மின்னினும்
கிரண சந்திர னுகுமோ
உலவுகன கர்ப்பூர வாடைபல கூட்டினும்
உள்ளியின் குணமா றுமோ
மட்டிகட் காயிரம் புத்திசொன் னலும்அதில்
மார்க்கமறி யாதை வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 37

## குறிப்பறிதல்

மனத்தில் கடும்பகை முகத்தில் அறியலாம்
மாநிலப் பூடுக ளெலாம்
மழையினுல் அறியலாம் நல்லோர் பொல்லார்தமை
மக்களால் அறிய லாகும்
கனமருவு சூரரைச் சமரினுல் அறியலாம்
கற்றவொரு வித்துவா னைக்
கல்விப்ர சங்கத்தி னுலறிய லாம்குணங்
களைநடையி னுலறிய லாம்
தனதகம் அடுத்தது பளிங்கினுல் அறியலாம்
சாதிசொல் லால்அறிய லாம்
தருநீதி கேள்வியால் அறியலாம் பிணிகளைத்
தாதுக்க ளால்அறிய லாம்
வனசவிக சிதவதன பரிபூர ணனந்த
வாலவடி வான வேலா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 38

## குணம் மாறாமை

குணமிலாத் துஷ்டமிரு கங்களையும் நயகுணம்
கொண்டுட் படுத்தி விடலாம்
கொடியபல விடநோய்க ளியாவுமௌஷதமது
கொடுத்துத் திருப்பி விடலாம்
உணர்விலாப் பிரமராட் சசிமுதல் பேய்களை
உகந்துகூத் தாட்டி விடலாம்
உபாயத்தி னுல்பெரும் பறவைக்கு நற்புத்தி
உண்டாக்க லாம்உயிர் பெறப்
பிணமதை எழுப்பலாம் அக்கினி சுடாமல்
பெரும்புனல் எனச்செய்ய லாம்
பிணியையும் அகற்றலாம் காலதூதுவரையும்
பின்புவரு மென்று சொல்லலாம்
மணலையுங் கயிருய்த் திரிக்கலாம் கயவர்குணம்
மட்டுந் திருப்ப வசமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 39

## இந்தீக்குணத்தோர் இவ்விலங்கு போல்வரேனல்

தான்பிடித் ததுபிடிப் பென்றுமே லவர்புத்தி
தள்ளிசெய் வோர் குரங்கு
சபையில் குறிப்பறிய மாட்டாமல் நின்றவர்
தாம்பயன் இயலாத மரமாம்
வீம்பினுல் எளியவரை எதிர்பண்ணி நிற்குமொரு
வெறியர்குரை ஞமலி ஆவார்
மிகநாடி வருவோர் முகம்பார்த் திடாலோபர்
மேன்மையில் லாத கழுதை
சோம்பலொடு பெரியோர் சபைக்குள் படுத்திடுந்
தூங்கலே சண்டிக் கடா

சூதுடன் அடுத்தோர்க் கிடுக்கணே செய்திடுந்
துஷ்டனே கொட்டு தேளாங்
மாம்பழந் தனைவேண்டி அந்நாளில் ஈசனை
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 40

## அற்பர் வாழ்வால் குணம் வேறுபடுதல்

அற்பர்க்கு வாழ்வுசற் றதிகமா னல்விழிக்
கியாவருரு வுந்தோன் றிடாது
அண்டி-நின் றேநல்ல வார்த்தைகள் உரைத்தாலும்
அவர் செவிக் கேறிடாது
முற்பக்ஷ மானபேர் வருகினும் வாருமென
மொழியவும் வாய் வராது
மோதியே வாதப் பிடிப்புவந் ததுபோல
முன்காலை அகல வைப்பார்
விற்பனம் மிகுத்தபெரி யோர்செய்தி சொன்னாலும்
வெடுவெடுத் தேசி நிற்பார்
விருதா மகத்துவப் பேயது சவுக்கடி
விழும்போது தீருமென் பார்
மற்புயந் தனில்நீப மாலையணி லோலனே
மார்பனே வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 41

## இத்தீங்குளோர் இக்கோள் போல்வரெனல்

அன்னைதந் தையர்புத்தி கேளாத பிள்ளையோ
அஷ்டமச் சனியாகு வான்
அஞ்சாம லெதிர்பேசி நிற்குமனை யாள்வாக்கில்
அங்காரகச் சன்ம மாம்

தன்னைமிஞ் சிச்சொன்ன வார்த்தைகே ளாஅடிமை
சந்திராஷ் டகமென்ன லாம்
தன்பங்கு தாவென்று சபையேறு தம்பியோ
சார்ந்தசன் மச்சூரி யன்
நன்னயமி லாதவஞ் சனைசெய்த தமையன்மூன்
ருமிடத் தில்வியா ழம்
நாடொறும் விரோதமிடு கொண்டோன் கொடுத்து
ராகுகே துக்களென லாம் [ளோன்
மன்னயனை அன்றுசிறை தனிலிட்டு நம்பற்கு
மந்திரம் உரைத்த குருவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 42

## நல்வினஞ் சேர்பயன்

சந்தன விருக்ஷத்தை அண்டிநிற் கின்றபல
தருவுமவ் வாசனை தரும்
தங்கமக மேருவை அடுத்திடுங் காக்கையுஞ்
சாயல்பொன் மயமே தரும்
பந்தமிகு பாலுடன் விளாவிய தண்ணீரெலாம்
பால்போல் நிறங்கொடுக் கும்
படிகமணி கட்குளே நிற்கின்ற வடமுமப்
படியே குணங்கொடுக் கும்
அந்தமிகு மரகதக் கல்லைத் தரித்திடில்
அடுத்ததும் பசுமை யாகும்
ஆனபெரி யோர்களொடு சகவாசம் அதுசெயின்
அவர்கள்குணம் வருமென்பர் காண்
மந்தர நெடுங்கிரியின் முன்கடல் கடைந்தஅரி
மருகமெய்ஞ் ஞான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 43

### வலியோரையும் ஊழ்விடாமை

அன்றுமுடி சூடுவ திருக்கரகு ராமன்முன்
அருங்கா டுரைந்த தென்ன
அண்டரெல் லாமமிர்தம் உண்டிடப் பரமனுக்
காலம் லபித்த தென்ன
வென்றிவரு தேவர்சிறை மீட்டநீ களவில்வே
டிச்சியைச் சேர்ந்த தென்ன
மேதினி படைக்குமய னுக்கொரு சிரம்போகி
வெஞ்சிறையி லுற்ற தென்ன
என்றுமொரு பொய்சொலா மன்னவன் விலைபோன
தென்னகாண் வல்லமையி னுல்
எண்ணத்தி னுலொன்றும் வாராது பரமசிவன்
எத்தனப் படிமுடியு மாம்
மன்றுதனில் நடனமிடு கங்கா தரன்பெற்ற
வரபுத்ர வடிவேல வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 44

### பெரியோர் வாக்ய பரிபாலனஞ் செய்தோர்

தந்தைதாய் வாக்யபரி பாலனஞ் செய்தவன்
தசரத குமார ராமன்
தமையனருள் வாக்யபரி பாலனஞ் செய்தோர்கள்
தருமனுக் கிளைய நால்வர்
சிந்தையில் உணர்ந்துகுரு வாக்யபரி பாலனஞ்
செய்தவன் அரிச்சந் திரன்
தேகியென் றோர்க்கில்லை எனுவாக்யபரி பாலனஞ்
செய்தவன் தான கன்னன்
நிந்தைதவிர் வாக்யபரி பாலனஞ் செய்தவன்
நீள்பல மிகுந்த அநுமான்

நிறையுடன் பத்தாவின் வாக்கியபரி பாலனம்
நிலத்தினில் நளாயினி செய்தாள்
மந்தைவழி கோயில்குள முங்குலவு தும்பிமுகன்
மகிழ்தர உகந்ததுணைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 45

முயர்ச்சியின் மிக்கது ஊழெனல்

வங்காளம் ஏறுகினும் வாருகோல் ஒருகாசு
மட்டன்றி அதிக மாமோ
வான்ஏரி உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி
வண்ணப் பருந்தாகு மோ
கங்கா சலந்தன்னில் மூழ்கினும் பேய்ச்சுரைக்
காய்நல்ல சுரை ஆகுமோ
கடலுக்குள் நாழியை அமுக்கியே மொண்டிடிற்
காணுமோ நால்நாழி தான்
ஐங்காதம் ஓடினுந் தன்வினைகள் தன்னுடே
அடையாமல் நீங்கி விடுமோ
யாரிடஞ் சென்றாலும் வெகுதொலைகள் சுற்றினும்
அமைத்தபடி அன்றி வருமோ
மங்காத செந்தமிழ்க் கொண்டுநக் கீரர்க்கு
வந்ததுயர் தீர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 46

இடும்பால் அழிவு

சூரபத் மன்பெலமும் இராவணன் தீரமும்
துடுக்கான கஞ்சன் வலியும்
துடியான இரணியன் வரப்ரசா தங்களுந்
தொலையாத வாலி திடமும்

பாரமிகு துரியோதன் னுதிநூற் றுவரது
 பராக்கிரமும் மது கைடவர்
 பாரிப்பும் மாபெலிதன் ஆண்மையுஞ் சோமுகன்
 பாங்கிலுறு வல்லமை களும்
ஏரணவு கீசகன் கனதையுந் திரிபுரர்
 எண்ணமுந் தக்கன் எழிலும்
 இவர்களது சம்பத்தும் நின்றவோ அவரவர்
 இடும்பால் அழிந்த தன்றோ
மாரனைக் கண்ணால் எரித்தருள் சிவன்தந்த
 வரபுத்ர வடிவேல வா
 மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
 மலைமேவு குமரேச னே. 47

நட்புநிலை

மாமதியில் முயலான ததுதேய் வுழித்தேய்ந்து
 வளருமப் போது வளரும்
 வாவிதனில் ஆம்பல்கொட் டிகளதனில் நீர்வற்றில்
 வற்றிடும் பெருகில் உயரும்
பூமருவு புதல்பூடு கோடையில் தீய்ந்திடும்
 பொங்குகா லந்த ழைக்கும்
 புண்டரிகம் இரவிபோம் அளவில் குவிந்திடும்
 போதுதய மாகில் மலரும்
தேமுடலி னைக்கிலுயிர் கூடவும் இளைக்குமது
 தேறிலுயி ருஞ்சிறக் குஞ்
 சேர்ந்தோர்க் கிடுக்கணது வந்தாலும் நல்லோர்
 சிநேகமிப் படியாகு மே
வாமனசொ ரூபமத யானைமுக னுக்கிளைய
 வாலகுரு பரவேல வா
 மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
 மலைமேவு குமரேச னே. 48

## கைப்பலனும் அவை

பருவத்தி லேபெற்ற சேயும் புரட்டாசி
பாதிசம் பாநடுகை யும்
பலமினிய ஆடிதனில் ஆணைவால் போலவே
பயிர்கொண்டு வருக ரும்பும்
கருணையொடு மிக்கநா ணயமுளோர் கையினில்
கடன்இட்டு வைத்த முதலும்
காலமது நேரில் தனக்குறுதி யாகமுன்
கற்றுணர்ந் திடுகல்வி யும்
விருதரச ரைக்கண்டு பழகிய சினேகமும்
விவேகிகட் குபகார மும்
வீணல்ல விவையெலாம் கைப்பலன தாகஅபி
விர்த்தியாய் வருமென்பர் காண்
மருவுலா வியநீப மாலையுந் தண்தரள
மாலையும் புனைமார் பனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 49

## சமயத்துக்கு உதவாதவை

கல்லாது புத்தகந் தனிலெழுதி வீட்டினில்
கட்டிவைத் திடு வித்தையும்
காலங்க ளுக்குதவ வேண்டுமென் றன்னியன்
கையில் கொடுத்த பொருளும்
இல்லாளை நீங்கியே பிறர்பாரி சதமென்
றிருக்கின்ற குடிவாழ்க் கையும்
ஏறுமா றுகவே தேசாந் தரம்போய்
இருக்கின்ற பிள்ளை வாழ்வும்
சொல்லான தொன்றுமவர் மனமான தொன்றுமாச்
சொல்லுவஞ் சகர் நேசமும்

சுகியமா யுண்டென் றிருப்பதெல் லாந்தருண
துரிதத்தில் உதவாது காண்
வல்லான கொங்கைமட மாதுதெய் வானைகுற
வள்ளிபங் காள நேயா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 50

திரும்ப மாட்டாதவை

ஆடரவின் வாயினில் அகப்பட்ட தவளையும்
ஆனைவா யிற் கரும்பும்
அரிதான கப்பலில் பாய்மரக் காற்றினில்
அகப்பட்டு மெலி காக்கையும்
நாடறிய வேதாரை வார்த்துக் கொடுத்ததும்
நமன்கைக்கு ளான உயிரும்
நலமாக வேஅணை கடந்திட்ட வெள்ளமும்
நாய்வேட்டை பட்டமுச லும்
தேடியுண் பார்கைக்கு ளானபல உடைமையும்
தீவாதை யான மனையும்
திரள்கொடுங் கோலரசர் கைக்கேறு பொருளும்
திரும்பிவா ராவென்பர் காண்
மாடமிசை அன்னக் கொடித்திரள்கொள் சோணாடு
வாழவந் திடுமுதல் வனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 51

இதினுமிது நன்றெனபவை

கடுகடுத் தாயிரம் செய்குவதில் இன்சொலால்
களிகொண் டழைத்தல் நன்று
கனவேள்வி ஆயிரஞ் செய்வதில் பொய்யுரை
கருத்தொடு சொல்லாமை நன்று

வெடுவெடுக் கின்றவோர் அவிவேகி உறவினில்
விவேகியொடு பகைமை நன்று
வெகுமதிக ளாயிரஞ் செய்வதின் அரைக்காசு
வேளைகண் டுதவல் நன்று
சடுதியிற் பக்குவஞ் சொல்லுங் கொடைக்கிங்கு
சற்றுமிலை என்னல் நன்று
சம்பத் துடன்பிணியில் மெலிகுவதில் நோயற்ற
தாரித்தி ரியநன்று காண்
மடுவினில் கரிமூல மென்னவந் தருள்செய்த
மால்மருக னுை முதல்வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 52

பல கூடினும் ஒன்றுக்கு ஈடாகாதவை

தாரகைக ளொருகோடி வானத் திருக்கினுஞ்
சந்திரற் கீடா குமோ
தாருவிற் கொடிதொனிகள் பலகூடி னுலுமொரு
தம்பட்ட ஓசை ஆமோ
கோரமிகு பன்றியின் குட்டிபல கூடினெரு
குஞ்சரக் கன்றுகு மோ
கொட்டிமலர் வாவியில் பலகூடி னுலுமொரு
கோகனக மலராகு மோ
பாரமிகு மாமலைகள் பலகூடி னுலுமொரு
பைம்பொன்மக மேரு ஆமோ
பலனிலாப் பிள்ளைக ளனேகம் பிறந்தும்விற்
பனனெருவ னுக்கு நிகரோ
வாரணக் கொடியொரு கரத்திற் பிடித்தொன்றில்
வடிவேல் அணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 53

## அருமை அறிதல்

மணமாலை யருமையைப் புணைபவர்க ளேறியவர்
மட்டிக் குரங் கறியுமோ
மக்களுடை அருமையைப் பெற்றவர்க ளேயறிவர்
மலடிதான் அறிவ துண்டோ
கணவருடை அருமையைக் கற்பான மாதறிவள்
கணிகையா னவள் அறிவளோ
கருதுமொரு சந்தியின் பாண்டமென்பதை வருங்
களவுான நாயரியு மோ
குணமான கிளியருமை தனைவளர்த் தவரறிவர்
கொடிய பூனையும் அறியுமோ
குலவுபெரி யோரருமை நல்லோர்க ளேயறிவர்
கொடுமூடர் தாமறிவரோ
மணவாளன் நீயென்று குறவள்ளி பின்தொடர
வன்மூடு தழுவும் அழகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 54

## தீச்சார்பாற் பயன்படாதவை

மடுவினில் கஞ்சமலர் உண்டொருவர் அணுகாமல்
வன்முதலை அங்கிருக் கும்
மலையினில் தேனுண்டு சென்றொருவர் கிட்டாமல்
மருவியதில் வண்டிருக் கும்
நெடுமைதிகழ் தாழைமலர் உண்டொருவர் அணுகா [மல்
நீங்காத முள்ளிருக் கும்
நீடுபல சந்தன விருக்ஷமுண் டணுகாது
நீரள்வு சூழ்ந்திருக் கும்
குடிமல்கி வாழ்கின்ற வீட்டினில் செல்லாது
குறைநாய்க ளங்கிருக் கும்

கொடுக்குந் தியாகியுண் டிடையூறு பேசுங்
கொடும்பாவி உண்டு கண்டாய்
வடுவையுங் கடுவையும் பொருவுமிரு கண்ணிகுற
வள்ளிக் குகந்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 55

## வேசையர் இழிவு

பூவில்வே சிகள்வீடு சந்தைப் பெரும்பேட்டை
புணைமலர் படுக்கை வீடு
பொன்வாசல் கட்டில்பொது அம்பலம் உடுத்ததுகி
பொருவில்சூ தாடு சாலை [ல்
மேவலா கியகொங்கை கையொடு திரள்பந்து
விழிமனங் கவர்தூண்டி லாம்
மிக்கமொழி நீர்மேலெ ழுத்ததிக மோகமொரு
மின்னலிரு தொடைசர்ப்ப மாம்
ஆவலா கியஅல்கு லோதண்டம் வாங்குமிடம்
அதிகபட மாமனது கல்
அமிர்தவா யிகழ்சித்ர சாலையெச் சிற்குழி
அவர்க்காசை வைக்க லாமோ
மாவடிவு கொண்டே ஒளித்தவொரு சூரனை
வதைத்தவடி வேலா யுதா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 56

## கலிகாலக் கொடுமை

தாய்புத்தி சொன்னல் மறுத்திடுங் காலமுயர்
தந்தையைச் சீறு காலஞ்
சற்குருவை நிந்தைசெய் காலமெய்க் கடவுளைச்
சற்றுமெண் ணுத காலம்

பேய்தெய்வ மொன்றுப சரித்திடுங் காலம்
புரட்டருக் கேற்ற காலம்
பெண்டாட்டி வையினுங் கேட்கின்ற காலநற்
பெரியோர்சொல் கேளாத காலம்
தேய்வுடன் பெரியவன் சிறுமையுறு காலமிகு
சிறியவன் பெருகு காலம்
செருவில்விட் டோடினோர் வரிசைபெறு காலம்
செப்புவோர்க் குதவு காலம் [வசை
வாய்மதம் பேசிவிடும் அனியாய காரர்க்கு
வாய்த்தகலி காலம் ஐயா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 57

அவரவர்க்கு உரியவை

கல்வியொடு கனமுறச் சபையின்மேல் வட்டமாக்
காணவைப் போன் பிதாவாம்
கற்றுணர்ந்தே தனது புகழால் பிதாவைப்ர
காசஞ் செய்வோன் புத்திரன்
செல்வமிகு கணவனே தெய்வமென் றனுதினஞ்
சிந்தைசெய் பவள்மனைவி யாம்
சினேகிதன் போலவே அன்புவைத் துண்மை
செப்புமவ னேசோத ரன் [மொழி
தொல்வள மிகுந்தநூற் கரைதெரிந் துறுதிமொழி
சொல்லுமவ னேகுரவ னும்
சொன்னநெறி தவறுமல் வழிபாடு செய்துவரு
துய்யனே இனிய சீஷன்
வல்விரக மிஞ்சுசூர குஞ்சரி யுடன்குறவர்
வஞ்சியை மணந்த கணவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 58

## சிறுமையிற் பெருமை

சேற்றில் பிறந்திடுங் கமலமலர் கடவுளது
திருமுடியின் மேலிருக் கும்
திகழ்சிப்பி உடலில் தனித்தமுத் தரசரது
தேகத்தின் மேலிருக் கும்
போற்றியிடு பூச்சியின் வாயின்நூல் பட்டென்று
பூசைக்கு நேச மாகும்
புகலறிய வண்டெச்சி லானதேன் தேவர்கொள்
புனிதஅபி டேக மாகும்
சாற்றிய புலாலொடு பிறந்தகோ ரோசனை
சவாதுபுழு கனைவர்க்கு மாம்
சாதியீ னத்தில் பிறக்கினும் கற்றோர்கள்
சபையின்மேல் வட்டம் அன்றோ
மாற்றிச் சுரத்தினை விபூதியால் உடல்குளிர
வைத்தமெய்ஞ் ஞான முதலே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 59

## செயத் தகாதவை

தான்ஆ சரித்துவரு தெய்வமிது என்றுபொய்ச்
சத்தியஞ் செயல்வி டாது
தன்வீட்டி லேற்றிய விளக்கென்று முத்தந்
தனைக்கொடுத் தாலது சுடும்
ஆனாலும் மேலவர்கள் மெத்தவுந் தனதென்
றடாதது செய்யிற் கெடுதியாம்
ஆனைதான் மெத்தப் பழக்கமா னாலுஞ்செ
யாதுசெய் தாற்கொன் றிடும்
தீனா தினிதென்று மீதூண் விரும்பினால்
தேகபீ டைகளே தருஞ்

செகராசர் தனதென்ன ஏலாத காரியம்
செய்தால் மனம்பொறுர் காண்
வாறுடு புகழுமொரு சோறுடு தழைய இவன்
வந்தவ தரித்த முதலே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 60

## நடுவு நிலைமை

வந்தவிவ காரத்தி லினியபரி தானங்கள்
வருமென்றும் நேச ரென்றும்
வன்பகைஞ ரென்றும்அய லோரென்றும் மிக்கதன
வானென்றும் ஏழை யென்றும்
இந்தவகை யைக்குறித் தொருபக்ஷ பாதமோர்
எள்ளள வுரைத்தி டாமல்
எண்ணமுட னேலிகித புத்தியொடு சாக்ஷிக்கும்
ஏற்கச்ச பாச மதமாம்
முந்தஇரு தலையுஞ் சமன்செய்த கோல்போல்
மொழிந்திடில் தர்மமது காண்
முனைவீம னுடல்பாதி மிருகந் தனக்கென்று
முன்தருமர் சொன்ன தலவோ
மைந்தனென அன்றுமை முலைப்பால் கொடுத்திட
வளர்ந்தருள் குழந்தை வடிவே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 61

## பக்ஷபாதம்

ரவிவ காரமா வந்தவர் முகம்பார்த்
துரைப்போர் மலைக்குரங் காம்
உயர்வெள் ளெருக்குடன் முளைத்துவிடும் அவரில்
உரையுமூர் பாழ்நத்த மாம் [லம்

தாரணியி லிவர்கள்கிளை நெல்லியிலை போலுகுஞ்
சமானமா எழுபிறப் புஞ்
சந்ததியி லாதுழல்வர் அவர்முகத்தி னின்மூத்த
தையலே குடியிருப் பாள்
பாரமிவ ரென்றுபுவி மங்கையும் நடுங்குவாள்
பழித்ததுர் மரண மாவார்
பகர்முடியு லேரவுர வாதிநர கத்தனு
பவிப்பரெப் போது மென்பார்
வாரமுடன் அருணகிரி நாதருக் கனுபூதி
வைத்தெழுதி யருள் குருபரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 62

ஒன்றில்லாமையாற் சிறவாதவை

கொங்கையில் லாதவட் கெத்தனைப் பணியுடைமை
கூடினும் பெண்மை யில்லை
கூறுநிறை கல்வியில் லாமலெத் தனைகவிதை
கூறினும் புலமை யில்லை
சங்கையி ல்லாதவர்க் கெத்தனை விவேகந்
தரிக்கினும் கனதை யில்லை
சட்சுவை பதார்த்தவகை உற்றலும் நெய்யிலாச்
சாதமுந் திர்த்தி யில்லை
பங்கயம் இலாமலெத் தனைமலர்கள் வாவியில்
பாரித்தும் மேன்மை யில்லை
புத்தியில் லாமல்வெகு நியமமாய் அர்ச்சனைகள்
பண்ணினும் பூசை யில்லை
மங்கையர் இலாமனைக் கெத்தனை அருஞ்செல்வம்
வரினுமில் வாழ்க்கை இல்லை
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 63

## அளவு படாதவை

வாரி ஆழத்தையும் புனலெறியும் அலைகளையும்
மானிடர்கள் சனனத்தை யும்
மன்னவர்கள் நினைவையும் புருஷர் போகங்களையும்
வானின்உயர் நீளத்தையும்
பாரிலெழு மணலையும் பலபிரா ணிகளையும்
படியாண்ட மன்னவரை யும்
பருப்பதத் தின்நிறையும் ஈசுரச் செயலையும்
பனிமாரி மொழி துளியை யும்
சீரிய தமிழ்ப்புலவர் வாக்கிலெழு கவியையுஞ்
சித்தர்தம துள்ளத்தை யும்
தெரிவையர்கள் சிந்தையையும் இவ்வளவெனும்
தெரிந்தள விடக்கூடு மோ
வாரிச மடந்தைகுடி கொண்டநெடு மாலுக்கு
மருகனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 64

## பிறர்மனை நயத்தல்

தந்தாரம் அன்றியே பரதாரமேல் நினைவு
தனைவைத்த காமு கர்க்குத்
தயையில்லை நிசமில்லை வெட்கமில்லை சமரினில்
தைரியஞ் சற்று மில்லை
அந்தகார மில்லைதொடர் முறையில்லை நிலையில்லை
அறிவில்லை மரபு மில்லை
அறமில்லை நிதியில்லை இரவினில் தனிவழிக்
கச்சமோ மனதி லில்லை
நந்தாத சனமில்லை இனமில்லை எவருக்கும்
நட்பில்லை கனதை யில்லை

நயமில்லை இளமைதனில் வலிமையிலை முத்திபெறு
ஞானமிலை என்பர் கண்டாய் [ம்
மந்தார பரிமள சுகந்தாதி புனையுமணி
மார்பனே அருளா ளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 65

## மானம் விடாமை

கனபாரம் ஏறில் பிளந்திடுவ தன்றியே
கல்தூண் வளைந்தி டாது
கருதலர்க ளாலுடைந் தாலும்உயிர் அளவிலே
கனசூரன் அமரில் முறியான்
தினமோர் இடுக்கண்வந் துற்றாலும் வேங்கைதோல்
சீவனள விற்கொ டாது
திறமான பெரியோர் சரீரங்கள் போகினுஞ்
செப்புமுறை தவறி டார்கள்
வனமேறு கவரிமான் உயிர்போகும் அளவுந்தன்
மயிரினைன் றுங்கொ டாது
வாராத ஆபத்து வரிகினுங் கற்புடைய
மாதுநிறை தவறி நடவாள்
மனதார உனதடைக் கலமென்ற கீரர்க்கு
வன்சிறை தவிர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 66

## திருவருட் சிறப்பு

திருமகள் கடாக்ஷமுண் டானல் எவர்க்குஞ்
சிறப்புண்டு கனதை யுண்டு
சென்றவழி எல்லாம் பெரும்பாதை ஆய்விடுஞ்
செல்லாத வார்த்தை செல்லும்

### அளவு படாதவை

வாரி ஆழத்தையும் புனலெறியும் அலைகளையும்
மானிடர்கள் சனனத்தை யும்
மன்னவர்கள் நினைவையும் புருஷர் போகங்களையும்
வானின்உயர் நீளத்தையும்
பாரிலெழு மணலையும் பலபிரா ணிகளையும்
படியாண்ட மன்னவரை யும்
பருப்பதத் தின்நிறையும் ஈசுரச் செயலையும்
பனிமாரி மொழி துளியை யும்
சீரிய தமிழ்ப்புலவர் வாக்கிலெழு கவியையுஞ்
சித்தர்தம துள்ளத்தை யும்
தெரிவையர்கள் சிந்தையையும் இவ்வளவெனும்
தெரிந்தள விடக்கூடு மோ
வாரிச மடந்தைகுடி கொண்டநெடு மாலுக்கு
மருகனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 64

### பிறர்மனை நயத்தல்

தந்தாரம் அன்றியே பரதாரமேல் நினைவு
தனைவைத்த காமு கர்க்குத்
தயையில்லை நிசமில்லை வெட்கமில்லை சமரினில்
தைரியஞ் சற்று மில்லை
அந்தகார மில்லைதொடர் முறையில்லை நிலையில்லை
அறிவில்லை மரபு மில்லை
அறமில்லை நிதியில்லை இரவினில் தனிவழிக்
கச்சமோ மனதி லில்லை
நந்தாத சனமில்லை இனமில்லை எவருக்கும்
நட்பில்லை கனதை யில்லை

நயமில்லை இளமைதனில் வலிமையில்லை முத்திபெறு [ம்
ஞானமில்லை என்பர் கண்டாய்
மந்தார பரிமள சுகந்தாதி புனையுமணி
மார்பனே அருளாளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 65

## மானம் விடாமை

கனபாரம் ஏறில் பிளந்திடுவ தன்றியே
கல்தூண் வளைந்திடாது
கருதலர்களாலுடைந் தாலும்உயிர் அளவிலே
கனசூரன் அமரில் முறியான்
தினமோர் இடுக்கண்வந் துற்றாலும் வேங்கைதோல்
சீவனள விற்கொடாது
திறமான பெரியோர் சரீரங்கள் போகினுஞ்
செப்புமுறை தவறிடார்கள்
வனமேறு கவரிமான் உயிர்போகும் அளவுந்தன்
மயிரிளைன் றுங்கொடாது
வாராத ஆபத்து வரினும் கற்புடைய
மாதுநிறை தவறி நடவாள்
மனதார உனதடைக் கலமென்ற கீரர்க்கு
வன்சிறை தவிர்த்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 66

## திருவருட் சிறப்பு

திருமகள் கடாக்ஷமுண் டானால் எவர்க்குஞ்
சிறப்புண்டு கனதையுண்டு
சென்றவழி எல்லாம் பெரும்பாதை ஆய்விடுஞ்
செல்லாத வார்த்தை செல்லும்

பொருளொரு துரும்புமரி யாதையாஞ் செல்வமோ
புகல்பெருக் காறு போலாம்
புவியின்முன் கண்டுமதி யாதபேர் பழகினவர்
போலவே நேசம் ஆவார்
பெருமையொடு சாதியில் உயர்ச்சிதரும் அனுதினம்
பேரும்ப்ர திஷ்டை உண்டாம்
பிரியமொடு பகையாளி கூடஉற வாகுவான்
பேச்சினிற் பிழை வராது
வருமென நினைத்தபொருள் கைகூடி வரும்அதிக
வல்லமைகள் மிகவும் உண்டாம்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 67

## நட்பு நிலை

கதிரவன் உதிப்பதெங் கேநளினம் எங்கே
களித்துள மலர்ந்த தென்ன
கார்மேகம் எங்கே பசுந்தோகை எங்கே
கருத்தில்நட் பான தென்ன
மதியம்எங் கேபெருங் குமுதம்எங் கேமுக
மலர்ந்துமகிழ் கொண்ட தென்ன
வல்இரவு விடிவதெங் கேகோழி எங்கே
மகிழ்ந்துகூ விடுதல் என்ன
நிதியரசர் எங்கே இருந்தாலும் அவர்களோடு
நேசமொன் றுயி ருக்கும்
நீதிமிகு நல்லோர்கள் எங்கிருந் தாலும்அவர்
நிறைபக்ஷம் மறவார்கள் காண்
மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவுசோ ணாட்ட திபனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 68

## காலம் அறிதல்

காகம் பகற்காலம் வென்றிடுங் கூகையைக்
கனகமுடி அரசர் தாமுங்
கருதுசய காலமது கண்டந்த வேளையில்
காரிய முடித்து விடுவார்
மேகமுங் கார்காலம் அதுகண்டு பயிர்விளைய
மேன்மேலு மாரி பொழியும்
மிக்கான அறிவுளோர் வருதருண காலத்தில்
மிடியாள ருக்குதவு வார்
நாகரிகம் உறுகுயில் வசந்தகா லத்திலே
நலமென் றுகந்து கூவும்
நல்லோர் குறித்ததைப் பதறுமல் அந்தந்த
நாளையில் முடிப்பர் கண்டாய்
வாகனைய காலைகன மாலைபுல் எனும்உலக
வாடிக்கை நிசம்அல்ல வோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 69

## இடன் அறிதல்

தரைதனில் ஓடுதேர் நீள்கடலில் ஓடுமோ
சலதிமிசை ஓடு கப்பல்
தரைமீதில் ஓடுமோ தண்ணீரில் உறுமுதலை
தன்முனே கரி நிற்குமோ
விரைமலர் முடிப்பரமர் வேணி அரவிணை வெல்ல
மிகுகருட னுலாகு மோ
வேங்கைகள் இருக்கின்ற காடுதனில் அஞ்சாமல்
வேறொருவர் செல்ல வசமோ
துரைகளைப் பெரியோரை அண்டிவாழ் வோர்தமைத்
துஷ்டர்பகை என்ன செய்யுந்

துணைகண்டு சேரிடம் அறிந்துசேர் என்றௌவை
சொன்னகதை பொய்யல்ல வே
வரைஊது மாயனை அடுத்தலால் பஞ்சவர்கள்
வன்போர் செயித்த தன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 70

யாக்கை நிலையாமை

மனுநன்மாந் தாதாமுன் ஆனவர்கள் எல்லாரும்
மண்மேல் இருந்து வாழ்ந்து
மடியா திருந்தபேர் இல்லைஅவர் தேடியதை
வாரிவைத் தவரு மில்லை
பணியதனை நம்பியே ஏர்பூட்டு கதையெனப்
பழுதான உடலை நம்பிப்
பார்மீதில் இன்னம் வெகுநாளிருப் போம்என்று
பலகோடி நினைவை எண்ணி
அனிதமாய் விருதாவில் மாய்வதே அல்லாமல்
அன்பாக நின் பதத்தை
அர்ச்சித்து முத்திபெறல் வேண்டுமென் றெண்ணுர்
ஆசைவலை யிற்சுழலு வார் [கள்
வனிதையர்கள் காமவி காரமே பகையாகும்
மற்றுமொரு பகைமை உண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 71

வேட்டகத் திகழ்ச்சி

வேட்டகந் தன்னிலே மருகன்வந் திடும்அளவில்
மேன்மேலும் உபச ரித்து
விருந்துகள் சமைத்து நெய்பால் தயிர் பதார்த்த
வேண்டுவ வெலாம் அமைப்பார் [வகை

ஊட்டமிகு வர்க்கவகை செய்திடுவர் தைலமிட்
டுறுதியாய் முழுகுவிப் பார்
ஓயாது தின்னவே பாக்கிலை கொடுத்திடுவர்
உற்றநாள் நாலாகி லோ
நாட்டம்ஒரு படிஇறங்கு வதுபோல் மரியாதை
நாளுக்குநாள் குறைவு றும்
நகைசெய்வர் மைத்துனர்கள் அலுவல்பார் போ
நாணுமல் மாமி சொல்வாள் [வென்று
வாட்டமனை யாளொரு துரும்பாய் மதிப்பள் அவன்
மட்டியிலும் மட்டி அன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 72

செல்வம் நிலையாமை

ஓடமிடும் இடமது மணல்சுடுஞ் சுடுமிடமும்
ஓடமிக வேநடக் கும்
உற்றதோர் ஆற்றின்மடு மேடாகும் மேடெலாம்
உறுபுனல்கொள் மடுவா யிடும்
நாடுகா டாகும்உயர் காடுநா டாகிவிடும்
நவில்சகடு மேல்கீ ழதாம்
நடையுறுஞ் சந்தைபல கூடும்உட னேகலையும்
நன்நிலவும் இருளாய் விடும்
நீடுபகல்போயபின் இரவாகும் இரவுபோய்
நிறைபகல் போதாய் விடும்
நிதியோர் மிடித்திடுவர் மிடியோர் செழித்திடுவர்
நிசமல்ல வாழ்வு கண்டாய்
மாடுமனை பாரிசனம் மக்கள்நிதி பூஷணமு
மருவுகன வாகும் அன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 73

துணைகண்டு சேரிடம் அறிந்துசேர் என்றௌவை
சொன்னகதை பொய்யல்ல வே
வரைஊது மாயனை அடுத்தலால் பஞ்சவர்கள்
வன்போர் செயித்த தன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 70

## யாக்கை நிலையாமை

மனுநன்மாந் தாதாமுன் ஆனவர்கள் எல்லாரும்
மண்மேல் இருந்து வாழ்ந்து
மடியா திருந்தபேர் இல்லைஅவர் தேடியதை
வாரிவைத் தவரு மில்லை
பணியதனை நம்பியே ஏர்பூட்டு கதையெனப்
பாழான உடலை நம்பிப்
பார்மீதில் இன்னம் வெகுநாளிருப் போம்என்று
பலகோடி நினைவை எண்ணி
அனிதமாய் விருதாவில் மாய்வதே அல்லாமல்
அன்பாக நின் பதத்தை
அர்ச்சித்து முத்திபெறல் வேண்டுமென் றெண்ணுர் [கள்
ஆசைவலை யிற்சுழலு வார்
வனிதையர்கள் காமவி காரமே பகையாகும்
மற்றுமொரு பகைமை உண்டோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 71

## வேட்டகத் திகழ்ச்சி

வேட்டகந் தன்னிலே மருகன்வந் திடும்அளவில்
மேன்மேலும் உபச ரித்து
விருந்துகள் சமைத்து நெய்பால் தயிர் பதார்த்த
வேண்டுவ வெலாம் அமைப்பார் [வகை

ஊட்டமிகு வர்க்கவகை செய்திடுவர் தைலமிட்
டுறுதியாய் முழுகுவிப் பார்
ஓயாது தின்னவே பாக்கிலை கொடுத்திடுவர்
உற்றநாள் நாலாகி லோ
நாட்டம்ஒரு படிஇறங்கு வதுபோல் மரியாதை
நாளுக்குநாள் குறைவு றுப்
நகைசெய்வர் மைத்துனர்கள் அலுவல்பார் போ
நாணுமல் மாமி சொல்வாள் [வென்று
வாட்டமனை யாளொரு துரும்பாய் மதிப்பள் அவன்
மட்டியிலும் மட்டி அன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 72

செல்வம் நிலையாமை

ஓடமிடும் இடமது மணல்சுடுஞ் சுடுமிடமும்
ஓடமிக வேநடக் கும்
உற்றதோர் ஆற்றின்மடு மேடாகும் மேடெலாம்
உறுபுனல்கொள் மடுவா யிடும்
நாடுகா டாகும்உயர் காடுநா டாகிவிடும்
நவில்சகடு மேல்கீ ழதாம்
நடையுறுஞ் சந்தைபல கூடும்உட னேகலையும்
நன்நிலவும் இருளாய் விடும்
நீடுபகல்போயபின் இரவாகும் இரவுபோய்
நிறைபகல் போதாய் விடும்
நிதியோர் மிடித்திடுவர் மிடியோர் செழித்திடுவர்
நிசமல்ல வாழ்வு கண்டாய்
மாடுமனை பாரிசனம் மக்கள்நிதி பூஷணமு
மருவுகன வாகும் அன்றோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 73

### பிறந்தார் பெருபேறு

சடமொன் றெடுத்தால் புவிக்குநல் லவனென்று
தன்பேர் விளங்க வேண்டும்
சதிருடன் இதல்லாது மெய்ஞ்ஞானி என்றவ
தரிக்கவே வேண்டும் அல்லால்
திடம்இனிய ரணசூர வீரனிவன் என்னவே
திசைமெச்ச வேண்டும் அல்லால்
தேகியென வருபவர்க் கில்லையென் ஞமலே
செய்யவே வேண்டும் அல்லால்
அடைவுடன் பலகல்வி ஆராய்ந்து வித்துவான்
ஆகவே வேண்டும் அல்லால்
அறிவான துரைமக்கள் ஆகவர வேண்டும்இவர்
அதிகபூ பால ரையா
வடகுவடு கிடுகிடென எழுகடலும் அலையெறிய
மணியுரகன் முடிக ணெரிய
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 74

### வேசை நிந்தை

தேடித்தம் வீட்டில் பணக்காரர் வந்திடில்
தேகசீ வன்போ லவே
சிநேகித்த உம்மையொரு பொழுதுகா ணுவிடில்
செல்லுரு தன்னம் என்றே
கூறிச் சுகிப்பரென் ஆசையுன் மேலென்று
கூசாமல் ஆணை இடுவார்
கொங்கையை வெடிக்கப் பிடிக்கக் கொடுத்திதழ்
கொடுப்பர்சும் பனம் உகப்பர்
வேடிக்கை பேசியே கைமுதல் பறித்தபின்
வேறுபட நிந்தை செய்து

விடவிடப் பேசுவார் தாய்கலக மூட்டியே
விட்டுத் துரத்தி விடுவார்
வாடிக்கை யாய்இந்த வண்டப் பரத்தையர்
மயக்கத்தை நம்ப லாமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 75

## இதற்கு இது உறுதியெனல்

கைக்குறுதி வேல்வில் மனைக்குறுதி மனையாள்
கவிக்குறுதி பொருள டக்கம்
கன்னியர் தமக்குறுதி கற்புடைமை சொற்குறுதி
கண்டிடில் சத்ய வசனம்
மெய்க்குறுதி முன்பின் சபைக்குறுதி வித்வசனம்
வேசையர்க் குறுதி தேடல்
விரகருக் குறுதிபெண் மூப்பினுக் குறுதிஊண்
வீரருக் குறுதி தீரம்
செய்க்குறுதி நீர்அரும் பார்க்குறுதி செங்கோல்
செழும்படைக் குருதி வேழம்
செல்வந் தனக்குறுதி பிள்ளைகள் நகர்க்குறுதி
சேர்ந்திடுஞ் சர்ச்சனர்க ளாம்
மைக்குறுதி யாகிய விழிக்குற மடந்தைசுர
மங்கைமரு வுந்தலைவ னே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 76

## வறுமையிற் சிறுமை

வறுமைதான் வந்திடில் தாய்பழுது சொல்லுவாள்
மனையாட்டி சற்றும் எண்ணாள்
வாக்கில் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வந்து விளையும்

சிறுமையொடு தொலையா விசாரமே அல்லாது
சிந்தையில் தைரிய மில்லை
செய்யசபை தன்னிலே சென்றுவர வெட்கமாம்
செல்வரைக் காணில் நாணும்
உறுதிபெறு வீரமுங் குன்றிடும் விருந்துவரில்
உயிருடன் செத்த பிணமாம்
உலகம் பழித்திடும் பெமையோர் முன்புசென்
றொருவரொடு செய்தி சொன்னால்
மறுவசன முஞ்சொலார் துன்பினில் துன்பம் இது
வந்தணுகி டாதருளு வாய்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 77

## தீச்சார்பால் நன்மை யிழப்பு

ஆனைதண் ணீரில்நிழல் பார்த்திடத் தவளைசென்
றங்கே கலக்கி உலவும்
ஆயிரம் பேர்கூடி வீடுகட் டிடில்ஏதம்
அறைகுறளு முடனே வரும்
ஏனைநற் பெரியோர்கள் போசனஞ் செயுமளவில்
ஈக்கிடந் திசைகேட தாம்
இன்பமிகு பசுவிலே கன்றுசென் றூட்டுதற்
கினியகோன் அதுதடுக் கும்
சேனைமன் னவரென்ன கருமநிய மிக்கினுஞ்
சிறியோர் களால் குறைபடுஞ்
சிங்கத்தை யும்பெரிய ரிஷபத்தை யும்பகைமை
செய்தொரு நரியல் லவோ
மானையுந் திகழ்தெய்வ யானையுந் தழுவுமணி
மார்பனே அருளாளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 78

## இடையூறுற்றும் பயன்படுபவை

ஆறுதண் ணீர்வற்றி விட்டாலும் ஊற்றுநீர்
அமுதபா னங்கொடுக் கும்
ஆதவனை ஒருபாதி கட்செவி மறைத்தாலும்
அப்போதும் உதவிசெய் வன்
கூறுமதி தேய்பிறைய தாகவே குறையினும்
குவலயத் திருள்சி தைக்கும்
கொல்லைதான் சாவிபோய் விட்டாலும் அங்குவரு
குருவிக்கு மேய்ச்ச லுண்டு
வீறுடன் உதாரிதான் மிடியான போதினிலு
மிகநாடி வருப வர்க்கு
வேறுவகை இல்லையென் றுரையா தியன்றளவு
வியந்துள மகிழ்ந்துதவு வான்
மாறுபடு சூரசங் காரகம் பீரனே
வடிவேல் அணிந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 79

## இன்னவர்க்கு இது இல்லையெனல்

சார்பிலா தவருக்கு நிலையேது முதலிலா
தவருக் கிலாபம் ஏது
தயைஇலா தவர்தமக் குறவேது பணமிலா
தார்க்கேது வேசை உறவு
ஊர்இலா தவர்தமக் கரசேது பசிவேளை
உண்டிடார்க் குறுதி நிலையேது
உண்மையில் லாதவர்க் கறம்ஏது முயல்விலார்க்
குறுவதொரு செல்வம் ஏது
சோர்விலா தவருக்கு மற்றுமொரு பயமேது
சுகமிலார்க் காசை ஏது

துர்க்குணம் இல்லாதவர்க் கெதிராளி யேதுஇடர்
துஷ்டர்க் கிரக்கம் ஏது [செய்
மார்புருவ வாலிமேல் அஸ்திரம் விடுத்தநெடு
மால்மருக னை முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 80

## இதினும் இது நன்றெனல்

பஞ்சரித் தருமையறி யார்பொருளை எய்தலில்
மலர்மனைப் பிச்சை நன்று
பரிவாக உபசாரம் இல்லா விருந்தினில்
பட்டினி இருக்கை நன்று
தஞ்சமொரு முயலைஅடு வென்றிதனில் யானையொடு
சமர்செய்து தோற்றல் நன்று
சரசகுணம் இல்லாத பெண்களைச் சேர்தலிற்
சன்னியா சித்தல் நன்று
அஞ்சலார் தங்களொடு நட்பா யிருப்பதனில்
அரவினொடு பழகுவது நன்று
அந்தணர்க் காபத்தில் உதவா திருப்பதனில்
ஆருயிர் விடுத்தல் நன்று
வஞ்சகர் உடன்கூடி வாழ்தலில் தனியே
வருந்திடுஞ் சிறுமை நன்று
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 81

## நிலையாதவை

கொற்றவர்கள் ராணுவமும் ஆறுநேர் ஆகிய
குளங்களும் வேசை உறவுங்
குணம்இலார் நேசமும் பாம்பொடு பழக்கமுங்
குலவுநீர் விளையா டலும்

பற்றலார் தமதிடை வருந்துவிசு வாசமும்
பழையதா யாதி நிணறும்
பரதார மாதரது போகமும் பெருகிவரு
பாங்கான ஆற்று வரவும்
நற்றுமொரு துர்ப்புத்தி கேட்கின்ற பேருறவும்
நல்லமத யாஜ நட்பும்
நாவிநல் லுறவுமொரு நாள்போல் இராதிவைகள்
நம்பப் படாது கண்டாய்
மற்றும்ஒரு துணையில்லை நீதுணை எனப்பரவும்
வானவர்கள் சிறைமீட்ட வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 82

## நற்புலவர் தீப்புலவர் செயல்

மிக்கான சோலையில் குயில்சென்று மாங்கனி
விருப்பமொடு தேடி நாடும்
மிடைகருங் காகங்கள் எக்கனி இருந்தாலும்
வேப்பங் கனிக்கு நாடும்
எக்காலும் வரிவண்டு பங்கே ருகத்தினில்
இருக்கின்ற தேனை நாடும்
எத்தனை சுகந்தவகை உற்றாலும் உருள்வண்
டினந்துர் மலத்தை நாடும்
தக்கோர் பொருட்சுவை நயங்கள்எங் கேயென்று
தாம்பார்த் துகந்து கொள்வார்
தாழ்வான வன்கண்ணர் குற்றமெங் கேஎன்று
தமிழில் ஆராய்வர் கண்டாய்
மைக்காவி விழிமாது தெய்வானை யுங்குறவர்
வள்ளியுந் தழுவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 83

## தாழ்தற் பெருமை

வேங்கைகள் பதுங்குதலும் மாமுகில் ஒதுங்குதலும்
விரிசிலை குனிந் திடுதலும்
மேடம தகன் றிடலும் யானைகள் ஒடுங்குதலும்
வெள்விடைகள் துள்ளி விழலும்
மூங்கில்கள் வணங்குதலும் மேலவர் இணங்குதலும்
முனிவர்கள் நயந்து கொளலும்
முதிர்படை ஒதுங்குதலும் விஞ்ஞர்கள் அடங்குத
முதலினர் பயந் திடுதலும் [லும்
ஆங்கரவு சாய்குதலும் மகிழ்மலர் உலர்ந்திடலும்
ஆயர்குழல் சூடு படலும்
அம்புவியில் இவைகாரி யங்களுக் கல்லாமல்
அதனால் இளைப்பு வருமோ
மாங்கனிக் காஅரனை வலமது புரிந்துவளர்
மதகரிக் கிளைய முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 84

## தெய்வச் செயல்

சோடாய் மரத்தில் புருரெண் டிருந்திடத்
துறவுகண் டேவே டுவன்
தோலாமல் அவையெய்ய வேண்டுமென் றொரு
தொடுத்துவில் வாங்கிநிற்க [கணை
ஊடாடி மேலே எழும்பிடில் அடிப்பதற்கு
உளவுரா சாளி கூட
உயரப் பறந்துகொண் டேதிரிய அப்போது
உதைத்தசிலை வேடன் அடியில்
சேடாக வல்விடந் தீண்டவே அவன்விழச்
சிலையில் தொடுத்த வாளி

சென்றிரா சாளிமெய் தைத்துவிட அவ்விரு
சிறைப்புரு வாழ்ந்த அன்றோ
வாடாமல் இவையெலாம் சிவன்செயல்கள் அல்லாது
மனச்செயலி னாலும் வருமோ
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 85

## பாடல் இயல்பு

எழுத்தசைகள் சீர்தளைகள் அடிதொடைகள் சிதை
திருக்கவே வேண்டும் அப்பால் [யா
ஈரைம் பொருத்தமொடு மதுரமாய்ப் பளபளப்
பினியசொற் கமைய வேண்டும்
அழுத்தமிகு குறளினுக் கொப்பாக வேபொருள்
அடக்கமு மிருக்க வேண்டும்
அன்பான பாவினம் இசைந்துவரல் வேண்டும்
அலங்காரம் உற்ற துறையில் [முன்
பழுத்துளம் உவந்தோசை உற்றுவரல் வேண்டும்
படிக்குமிசை கூடல் வேண்டும்
பாங்காக இன்னவை பொருந்திடச் சொற்கவிதை
பாடிற் சிறப்பென்பர் காண்
மழுத்தினஞ் செங்கைதனில் வைத்தகங் காளன்
மைந்தனென வந்த முருகா [அருள்
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 86

## விபூதி வாங்கும் முறைமை

பரிதனில் இருந்தும்இயல் சிவிகையில் இருந்தும்
பலகையில் இருந்தும் மிகவே [உயர்
பாங்கான அம்பலந் தனிலே இருந்தும்
பருத்ததிண் ணையிலி ருந்தும்

தெரிவொடு கொடுப்பவர்கள் கீழ்நிற்க மேல்நின்று
திருநீறு வாங்கி இடினுஞ்
செங்கையொன் ருலும்விரல் மூன்ருலும் வாங்கினுந்
திகழ்தம் பலத்தி னேடும்
அரியதொரு பாதையில் நடக்கின்ற போதிலும்
அசுத்தநில மான அதிலும்
அங்கே தரிக்கிலுந் தந்திடில் தள்ளினும்
அவர்க்குநர் கென்பர் கண்டாய்
வரிவிழி மடந்தைகுற வள்ளிநா யகிதனை
மணந்துமகிழ் சக நாதனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 87

## விபூதி தரிக்கும் முறைமை

பத்தியொடு சிவசிவா என்றுதிரு நீற்றைப்
பரிந்து கையா லெடுத்துப்
பாரினில் விழாதபடி அண்ணுந்து செவியொடு
பருத்தபுய மீதில் ஒழுக
நித்தமு விரல்களால் நெற்றியில் அழுந்தலுற
நினைவாய்த் தரிப்ப வர்க்கு
நீடுவினை யணுகாது தேகபரி சுத்தமாம்
நீங்காமல் நிமலன் அங்கே
சத்தியொடு நித்தம்விளை யாடுவன் முகத்திலே
தாண்டவஞ் செய்யுந் திரு
சஞ்சலம் வராதுபர கதியுதவும் இவரையே
சத்தியஞ் சிவனென்ன லாம்
மத்தினிய மேருஎன வைத்தமு திணைக்கடையு
மால்மருக னை முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 88

## இன்ன உறுப்புகளால் பயன் இல்லையெனல்

தேவால யஞ்சுற்றி டாதகால் என்னகால்
தெரிசியாக் கண்என்ன கண்
தினமுமே நின்கமல பாதத்தை நினையாத
சிந்தைதான் என்ன சிந்தை
மேவாக மஞ்சிவ புராணம் அவை கேளாமல்
விட்டசெவி என்ன செவிகள்
விமலனை வணங்காத சென்னிஎன் சென்னிபணி
விடைசெயாக் கைஎன்ன கை
நாவார நினையேத் திடாதவாய் என்னவாய்
நல்தீர்த்த மூழ்கா உடல்
நானிலத் தென்னவுடல் பாவியா கியசனனம்
நண்ணினுல் பலனேது காண்
மாவாகி வேலைதனில் வருசூரன் மார்புருவ
வடிவேலை விட்ட முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு 89
மலைமேவு குமரேசனே.

## நற்பொருளோடு தீப்பொருள் பிறந்தல்

கோகனக மங்கையுடன் மூத்தவள் பிறந்தென்ன
குலவும் ஆட்டின்கண் அதர்தான்
கூடப்பிறந்தென்ன தண்ணீரி னுடனே
கொடும்பாசி உற்றும் என்ன
மாகருணும் அமுதினெடு நஞ்சும் பிறந்தென்ன
வல்லிரும் பில்துருத் தான்
வந்தே பிறந்தென்ன நெடுமரந் தனில்மொக்குள்
வளமொடு பிறந்தென்ன உண்
பாகமிகு செந்நெலொடு பதர்தான் பிறந்தென்ன
பன்னுமொரு தாய் வயிற்றில்

பண்புரு விவேகியொடு கயவர்கள் பிறந்தென்ன
பலனேதும் இல்லை யன்றே
மாகனக மேருவைச் சிலையென வளைத்தசிவன்
மைந்தனென வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவுகுமரேச னே. 90

## தன் இனத்தால் அழிவு

குலமான சம்மட்டி குறடுகைக் குதவியாய்க்
கூரிரும் புகளை வெல்லும்
கோடாலி தன்னுளே மரமது நுழைந்துதன்
கோத்திரம் எலாம் அழிக்கும்
நலமான பார்வைசேர் குருவியா னதுவந்து
நண்ணுபற வைகளை ஆர்க்கும்
நட்புடன் வளர்த்தகலை மானென்று சென்றுதன்
நவில்சாதி தனையி ழுக்கும்
உலவுநல் குடிதனில் கோளர்கள் இருந்துகொண்
டுற்றுரை ஈட ழிப்பர்
உளவனில் லாமலூர் அழியா தெனச்சொல்லும்
உலகமொழி நிசம் அல்லவோ
வலமாக வந்தர னிடத்தில் கனிகொண்ட
மதயானை தன்சோ தரா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 91

## விணுக்கு உழைத்தல்

குயின்முட்டை தனதென்று காக்கை அடைகாக்கும்
குணம்போலும் ஈக்கள் எல்லாம்
கூடியே தான்உண்ண வேண்டுமென்றே தினங்
கூடுய்த்த நறவு போலும்

பயில்சோர ருக்குப் பிறந்திடத் தாம்பெற்ற
பாலனென் றுட்கருதி யே
பாராட்டி முத்தமிட் டன்பாய் வளர்த்திடும்
பண்பிலாப் புருடர் போலும்
துயிலின்றி நிதிகளைத் தேடியே ஒருவர்பால்
தொட்டுத் தெறித்தி டாமல்
தொகைபண்டு வைத்திடுவர் கைக்கொண்டு [போகவரு
சொந்தமா னவர்வேறு காண்
வயிரமொடு சூரனைச் சங்கார மேசெய்து
வானவர்க் குதவு தலைவா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு 92
மலைமேவு குமரேச னே.

## இது சேரின் இது பயன்படாதெனல்

அழலுக்கு ளேவிட்ட நெய்யும் பெருக்கான
ஆற்றில் கரைத்த புளியும்
அரிதான கமரிற் கவிழ்த்திட்ட பாலும்வரும்
அலகைகட் கிடு பூசையும்
சுழல்பெருங் காற்றினில் வெடித்தபஞ் சும்மணற்
சொரிநறும் பனிநீரும் நீள்
சொல்லரிய காட்டுக் கெரித்தநில வும்கடல்
சுழிக்குள்ளே விடுகப்ப லும்
விழலுக் கிறைத்திட்ட தண்ணீரும் முகமாய
வேசைக் களித்த பொருளும்
வீணருக் கேசெய்த நன்றியும் பலனில்லை
விருதாவி லென்பர் கண்டாய்
மழலைப் பசுங்கிள்ளை முன்கைமலை மங்கைதரு
வண்ணக் குழந்தை முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு 93
மலைமேவு குமரேச னே.

## கைவிடத் தகாதவர்

அன்னைசுற் றங்களையும் அற்றைநாள் முதலா
அடுத்துவரு பழையோ ரையும்
அடுபகைவ ரில்தப்பி வந்தஒரு வேந்தனையும்
அன்பான பெரியோ ரையும்
தன்னைநம் பினோரையும் ஏழையா னவரையுஞ்
சார்ந்தமறை யோர்தம் மையும்
தருணம்இது வென்றுநல் லாபத்து வேளையில்
சரணம் புகுந்தோ ரையும்
நன்னயம தாகமுன் னுதவிசெய் தோரையும்
நாளுந் தனக்குறுதி யாய்
நத்துசே வகனையுங் காப்பதல் லாதுகை
நழுவவிடல் ஆகாது காண்
மன்னயிலும் இனியசெஞ் சேவலும் செங்கைமலர்
வைத்தசர வணபூ பனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 94

## தகாத செயல்

அண்டிவரும் உற்றார் பசித்தங் கிருக்கவே
அன்னியர்க் குதவு வோரும்
மாசுதபு பெரியோர்செய் நேசத்தை விட்டுப்பின்
அற்பரை அடுத்த பேரும்
கொண்ட ஒரு மனையாள் இருக்கப் பரத்தையைக்
கொண்டாடி மருவு வோரும்
கூறுசற் பாத்திரம் இருக்கமிகு தானமது
குணம்இலார்க் கீந்த பேரும்
கண்டுவரு புதியோரை நம்பியே பழையரைக்
கைவிட் டிருந்த பேரும்

கரிவாலை விட்டுநரி வால்பற்றி நதிநீர்
கடக்கின்ற மரியாதை காண்
வண்டடர் கடப்பமலர் மாலிகா பரணமணி
மார்பனே அருளாளனே
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 95

## நல்லோர் முறைமை

கூடியே சோதரர்கள் வாழ்தலாலும்தகு
குழந்தைபல பெறுதலாலும்
குணமாக வேபிச்சை இட்டுண்கையாலும்
கொளும்பிதிர்க் கிடுதலாலும்
தேடியே தெய்வங்களுக்கீதலாலும்
தியாகங் கொடுத்தலாலும்
சிறியோர்கள் செய்திடும் பிழையைப் பொறுத்துச்
சினத்தைத் தவிர்த்தலாலும்
நாடியே தாழ்வாய் வணங்கிடுதலாலுமிக
நல்வார்த்தை சொல்லலாலும்
நன்மையே தருமலால் தாழ்ச்சிகள் வராவினவ
நல்லோர்கள் செயுமுறைமை காண்
வாடிமன நொந்துதமிழ் சொன்ன நக்கீரன்முன்
வந்துதவி செய்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே. 96

## அடைக்கலங் காத்தல்

அஞ்சலெனு நாயினுடல் தருமன் சுமந்துமுன்
ஆற்றைக் கடத்துவித்தான்
அடைக்கலம் எனுங்கயற் காக நெடுமாலுடன்
அருச்சுனன் சமர்புரிந்தான்

தஞ்சமென வந்திடு புருவுக்கு முன்சிபி
சரீரந் தனைக்கொ டுத்தான்
தடமலைச் சிறகரிந் ததனைமுன் காக்கத்
ததீசிமுது கென்பளித் தான்
இன்சொலுட னேபூத தயவுடையர் ஆயினோர்
எவருக்கும் ஆபத் திலே
இனியதஞ் சீவனை விடுத்தாகி லுங்காத்
திரங்கி ரக்ஷிப்பர் யன்றோ
வஞ்சகிர வுஞ்சமொடு தாருகன் சிங்கமுகன்
வளர்சூரன் உடல்கீண்ட வா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 97

## யோக்கியா யோக்கியம்

பாலினொடு தேன்வந்து சேரில்ருசி அதிகமாம்
பருகுநீர் சேரில் என்னும்
பவளத்தின் இடைமுத்தை வைத்திடில் சோபிதம்
படிகமணி கோக்கில் என்னும்
மேலினிய மன்னர்பால் யானைசேர் வதுகனதை
மேஷமது சேரில் என்னும்
மிக்கான தங்கத்தில் நவமணி உறிற்பெருமை
வெண்கல அழுத்தில் என்னும்
வாலிப மினுர்களுடன் இளையோர்கள் சேரினலம்
வளைகிழவர் சேரில் என்னும்
மருவுநல் லோரிடம் பெரியோர் வரில்பிரியம்
வருகயவர் சேரில் என்னும்
மாலிகை தரித்தமணி மார்பனே தெய்வானை
வள்ளிக்கு வாய்த்த கணவா

மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 98

## பெரியோர் இயல்பு

அன்னதானஞ் செய்தல் பெரியோர்சொல் வழிநிற்றல்
ஆபத்தில் வந்த பேருக்கு
அபயங் கொடுத்திடுதல் நல்லினஞ் சேர்ந்திடுதல்
ஆசிரியன் வழிநின்று அவன்
சொன்னமொழி தவருது செய்திடுதல் தாய்தந்தை
துணையடி அருச்சனை செயல்
சோம்பலில் லாமல்உயிர் போகினும் வாய்மைமொ
தொல்புவியில் நாட்டி இடுதல் [ழி
மன்னரைச் சேர்ந்தொழுகல் கற்புடைய மனைவியொ
வைகினுந் தாமரை இலை [டு
மருவுநீர் எனவுறுதல் இவையெலாம் மேலவர்த
மாண்பென் றுரைப்பர் அன்றே
வன்னமயில் மேலிவர்ந் திவ்வுலகை ஒருநொடியில்
வலமாக வந்த முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேச னே. 99

## நூலின் பயன்

வன்னமயில் ஏறிவரு வேலா யுதக்கடவுள்
மலைமேல் உகந்த முருகன்
வள்ளிக் கொடிக்கினிய வேங்கைமரம் ஆகினேன்
வானவர் கள்சேனு பதி

கன்னன்மொழி உமையாள் திருப்புதல்வன் அரன்
கங்கைபெற் றருள்புத் திரன் [மகன்
கணபதிக் கிளையவொரு மெய்ஞ்ஞான தேசிகக்
கடவுள் ஆவினன்குடிபுரி னன்

பன்னரிய புல்வயலில் வாலகும ரேசர்மேல்
பரிந்துகுரு பாத தாசன்,
பாங்கான தமிழாசி ரியவிருத் தத்தின்அறை
பாடலொரு நூறு நாடி

நன்னயம தாகப் படித்தபேர் கேட்டபேர்
நாடொறுங் கற்றபேர் கள்
ஞானயோ கம்பெறுவர் பதவியா வும்பெறுவர்
நன்முத்தி யும்பெறு வரே. 100

குமரேச சதகம் முற்றிற்று.

———

திருமகள் அச்சகம், சென்னை-79.—1983.